கவியரசர்

# இளந்தேவன்



# இவர்கள்

| | | |
|---|---|---|
| Title | : | IVARKAL |
| Author | : | Kaviyarasar ILANDEVAN |
| Published by © | : | Vennilavu Pathippakam,<br>D 44,Tod Hunter Nagar,<br>Saidapet, Madras 600 015. |
| Language | : | Tamil |
| Date of Publication | : | June 1993 |
| Edition | : | First |
| Paper Used | : | Seshasayee 11.6 |
| Size | : | Double Crown 1 x 16 |
| Printing types | : | 12pt |
| Number of Copies | : | 3,000 |
| Number of Pages | : | 160 |
| Price | : | Rs.30/- (Rupees Thirty only) |
| Laser Typesetting & Printing | : | Japonica, Madras -14.<br>Phone:826 53 31 |
| Cover Design | : | Kumaraswamy |
| Subject | : | Poems on eminent people. |

# படைப்பாளர் பக்கம்

'இவர்கள்' ஒரு புதிய முயற்சி! என் இதயத்தில் இடம் பெற்ற சிலரைப் பாட்டுத் தேரில் எற்றிஉங்களைப் பார்க்க அனுப்பியிருக்கிறேன். இவர்களில் பலரை நீங்கள் பார்க்கத்துடித்ததும் உண்டு. பார்த்து மகிழ்ந்ததும் உண்டு. இவர்களின் நினைவுகள் உங்கள் நெஞ்சிலே பசுமையாய் இருக்கும்.

'இவர்களில்' - இவர்கள் இடம்பெறாமல் இருந்திருக்கலாமே என்று நீங்கள் நினைப்பதும் 'இவர்களில்' - இவர்கள் ஏன் இடம்பெறவில்லை என்று நீங்கள் கேட்பதும் நியாயமானவை.

நான் நிகழ்காலத்தைப் போற்றுகிறேன். தமிழனின் பல்லாயிரமாண்டுத் தவறு நிகழ்காலம் போற்றாமை. இறந்தபிறகு சிலை வைத்தால் போதும் என்று யாரோ தவறாக அவனுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள்.

என் பலமும், சிலரது பார்வையில் என் பலவீனமும் - தனி நபர்களைப் போற்றுவதுதான்! நான் இவர்களைப் போற்றுகிறேன். ஏது கருதியுமன்று; எதை எதிர்பார்த்துமன்று! பாடாமல் இருக்கமுடியவில்லை என்பதால் பாடியிருக்கிறேன்.

இவர்கள் ஒளியுடைய பெருமக்கள். ஒளிக்கு வெளிச்சம் காட்டுவது அதிகப்படியான செயல்தான். ஆனால், ஒளி உச்சியில் இருக்கவேண்டும் என்னும் என் ஆசை நியாயமானது. மனித முயற்சிகளின் உச்சம்

கவிதை. எனவே ஒளியைக் கவிதையில் ஏற்றிவைப்பது உலகுக்கே உவப்பான செயல் என்று முடிவுசெய்தேன்.

இவர்களில் பெரும்பாலோனோர், என் இந்தப் பிறவியில், நான் வாழும் காலத்துப் பெருமக்கள். வாயிருக்கும் வரை இவர்களை நான் வாழ்த்துவேன். சிலர் 'இவர்களில்' இடம் பெறவில்லை. இனி, 'இவர்களில்' அவர்களும் இடம் பெறுவார்கள்!

இது காலத்தின் பதிவு. காலம் தன் கைப்பட எழுதிய எழுத்து. உண்மையைச் சொன்னால், இது இளந்தேவன். முயற்சியன்று. காலம் தன்னைப்பற்றித் தானே எழுதியது. (தன்னைப் பற்றித் தானே சொல்லிக்கொள்ளக் கூடாது என்பது தமிழனின் தவறான தர்க்கம்; தமிழச் சாதியின் மூடநம்பிக்கை. உள்ளே பாராட்டு ஏக்கமும், உதடுகளில் போலியடக்கமும் முகமூடிக்குக் கீழ் தெரிகிற முரண்பாடுகள். தமிழா இயல்பாய் இரு! வெளிப்படையாய் இரு! நீயாய் இரு!).

எல்லோரும் போற்றுங்கள், எல்லோரையும் போற்றுங்கள். எப்போதும் போற்றுங்கள். அப்போதுதான் எவருக்குள்ளேயுமிருக்கும் நல்லது துலங்கும்; அல்லது கரையும்!

ஒன்று கருதிப் போற்றுவது ஈனத்தனம்! போற்றுவதற்காகவே போற்றுங்கள்!

'இவர்களுக்கும்', 'இவர்களைப்' போன்றவர்களுக்கும் இந்த எழுத்து நிவேதனம் தொடரும்!

'இது சாதனை செய்க பராசக்தி!'

21-06-93
D-44,தாடண்டர் நகர், சென்னை-15.

இன்ப அன்புடன்,
**இளந்தேவன்**

# பதிப்பாளர் பக்கம்

வெண்ணிலவுப் பதிப்பகத்தின் இரண்டாம் வெளியீடு 'இவர்கள்'! மிகக்குறுகிய காலத்தில், கவிதைகளைத் தொகுத்து, ஒரு வாரத்துக்கும் குறைவான காலத்தில் இது உருவாகி உங்கள் கைகளுக்கு வருகிறது. தமிழில், இதற்குமுன், இப்படி ஒருநூல் வந்திருக்கிறதா என்று தெரியவில்லை. ஒரு முதல்முயற்சி இது என்றே நினைக்கிறோம்.

எங்கள் முதல் வெளியீடான காற்றுக்குதிரைக்குக் கிடைத்த வரவேற்பு எங்களுக்கு இப்படி ஒரு முயற்சியைச் செய்யும் ஊக்கத்தை வழங்கியுள்ளது! காற்றுக்குதிரையை விற்பனை நிலையங்களுக்கு அனுப்பாமல் இருந்தபோதும், வீடுதேடி வந்து வாங்கியவர்களாலேயே பெரும்பாலான பிரதிகள் விற்றுப்போயுள்ளன. கவியரசரின் இலங்கைப் பயணத்தின்போது இலங்கைத் தமிழர்கள் காட்டிய புத்தக ஆர்வம் எங்களை வியக்கவைத்தது. அவர்களுக்கும் எங்கள் இதயம் கனிந்த நன்றி உரியது.

கவியரசரின் முந்தைய படைப்புகளைக் கேட்டு நிறைய அன்பர்கள் வருகிறார்கள். எனவே, பழைய நூல்களின் பதிப்புப் பணியிலும் உங்கள் ஆதரவோடு ஈடுபடுவோம்.

இந்த நிகரற்ற முயற்சிக்கு ஒத்துழைத்த எல்லோர்க்கும், குறிப்பாக படியெடுத்துக் கொடுத்த செல்வி அழகு மலருக்கும், செல்வர்கள் கண்ணப்பன், இராம்குமார் ஆகியோருக்கும், திருவாளர் ஆனந்த் பி அய்யருக்கும், பேராசிரியை உலக நாயகிக்கும் எங்கள் நன்றி.

கவியரசரின் பெரிய ரசிகர் இளைஞர் ரவி எடுத்துக்கொண்ட முயற்சிகள் இந்த நூலை இவ்வளவு விரைவாக வெளிக்கொணர உதவியிருக்கின்றன.

கவியரசர் பெயரால் உருவாகியுள்ள **'இளந்தேவன் இலக்கிய இயக்கத்'** தொடக்கவிழாவில் இந்த நூல் வெளியாவது பொருத்தமானது.

வார்த்தைச் சித்தர் வலம்புரியார், **'இவர்கள்'** இப்போது வந்தேயாகவேண்டும், என்று சொன்ன வாசகம்தான் பதிப்பகத்துக்கு ஊக்கமளித்திருக்கிறது.

இவர்களுக்கு எங்கள் நன்றி

உங்கள் இல்லத்துக்கு 'இவர்கள்' வருகிறார்கள். வரவேற்று மகிழுங்கள்.

**21-6-93**
**சென்னை-15**

**சந்திரகாந்தி**
வெண்ணிலவுப் பதிப்பகம்

# இவர்கள்

## அருளாளர்கள்



## அரும்பெருந் தலைவர்கள்

## அருந்தமிழ்ச் செல்வர்கள்

## அருங்கலைவாணர்கள்

## ஆன்றோர்கள்



## அன்புக்களஞ்சியங்கள்

## காஞ்சிப்பெரியவர்

வித்தாகி மூலத்தின் விதையாகி இப்புவியின்
வேரானஇந்து மதமே!

வேதத்தின் உதயமே! நாதத்தின் இதயமே!
வேதாந்த சித்தாந்தமே!

முத்தாகிப் புன்முறுவல் முகங்காட்டும் அண்ணலே
முழு மதிச் சுடர் வெள்ளமே!

முழு ஞானச் செல்வமே! சிவனார்க்கு வில்வமே!
முத்தி தரும் அருள் உள்ளமே!

பத்தாகி நிற்கின்ற திசையெங்கும் பக்தி மணம்
பாலிக்க வந்த பதமே!

பகலிரவு அற்றதொரு சுக நிலையில் எப்பொழுதும்
பரவி வரும் பரமநதியே!

சத்தாகிச் சித்தாகி ஆனந்த மாம் ஆதி
சங்கரன் தந்த குலமே!

சக்தி வளர் காஞ்சி நகர்ப் பீடமதில் ஒளிவீசும்
சங்கரர் என்னும் மணியே!

தேவிக்குள் ஒளிவீசும் தெய்வீக மணி என்று
தேசங்கள் போற்றும் குருவே!

திருவுக்கும் திருவான திருவாளன் திரு மார்பில்
திகழ்கின்ற மணியின் உருவே!

காவிக்குள் ஒளிவீசும் காவியப் பொருள் என்று
கண் கூற வந்த கதியே

கடையர்க்கும் கடைத்தேற்றம் கட்டாயம் உண்டென்று
காட்ட வரும் அன்பு நிதியே!

வாவிக்குள் தாமரைகள் வானமுதம் தந்துதவும்
வளமார்ந்த காஞ்சி அமுதே!

வண்டுகளின் செந்தமிழில் வானவரும் நெஞ்சுருகி
வந்து விடும் காஞ்சி வரமே!

ஆவிக்குள் கண்கொண்டு பார்க்கின்ற ஆனந்தம்
அருள் கின்ற எங்கள் முனியே!

அன்னையவள் காஞ்சி நகர்ப் பீடமதில் ஒளிவீசும்
அகில குரு வானமணியே!

# தந்தை பெரியார்

மானிடத்தின் எரிமலையே! மருட்டும் சாதி
மயக்கத்தைப் போக்கவந்த மருந்தே! எங்கள்
கூனி விட்ட முதுகினிலே எலும்பைத் தொட்டுக்
கோணல்களை நிமிர்த்திவிட்ட கொள்கைக் கோவே!
தேனிடத்தில் மனம்வைத்த ஈக்க ளைப்போல்
திராவிடத்தின் இளைஞர்களை ஆக்கும் தீரா!
நானுனக்குத் தேரோட்ட வந்தேன் ஏறி
நடத்துக நீ கொள்கைப்போர் உலகமெல்லாம்!

சுமாராக ஆறுபத்து வருடம் வாழ்க்கைச்
சுகத்தையெலாம் நினைப்பதற்கு நேர மின்றி
அமாவாசை இருளினிலே கிடந்த நாட்டின்
அறியாமை யோடு நீ போர்தொ டுத்தாய்!
இமாலயமே உனை எதிர்த்த போதும் உச்சி
ஏறியதை மிதிக்காமல் விட்ட தில்லை
சமாதான உடன்படிக்கை என்ப துன்றன்
சரித்திரத்தில் கிடையாது! போரே உண்டு!

தண்ணீரில் பாஸ்வரத்தை வைத்தி ருந்தால்
தன் குணத்தைக் காட்டாது! வெளியே விட்டால்
கண்ணிமைக்கும் நேரத்தில் காற்றுப் பட்டுக்
கனல் பரப்பும்! அது போல உன்வாய் எச்சில்
தண்ணீரில் ஊறுகிற வரைக்கும் சொற்கள்
தழல் பரப்பி விடுவதில்லை! வெளியே விட்டால்
மண் மீது பட்டதெல்லாம் எரியும், சொற்கள்
மஞ்சள் நிறப் பாஸ்வரமா, சொல்வாய் ஐயா?

கண்பட்ட இடமெல்லாம் உன்றன் பார்வைக்
கனல்பற்றி எரிகின்ற தென்றார்! நாங்கள்
புண்பட்டுப் போனோமே என்று சொல்லிப்
புகைபட்ட நெஞ்சத்தார் புலம்பு வார்கள்!
பண்பட்டுப் போகட்டும் என்று தானே
படைதொட்டாய் இவரழிய நினைத்தா யா நீ!
வெண்பட்டு மயிர்த்தாடி வேந்தா உன்றன்
விழிபட்ட இடமெல்லாம் சீர்தி ருத்தம்

வாழைமட்டை தீப்பற்றி எரியும் வண்ணம்
வார்த்தைகளை நீ யெறிந்தாய்! அதனால் அன்றோ
கோழைகளும் நரம்புமுறுக் கேறி இன்று
கொடுமைகளின் குரல்வளையை நெறிக்கின்றார்கள்!
ஊழை மட்டும் நம்புங்கள் என்று கத்தும்
உபதேச உலக்கைகளின் இருண்ட நெஞ்சத்
தாழை மட்டும் நீதிறக்கா விட்டால் நாட்டில்
தமிழ்ச் சாதி சூனியத்தில் மறைந்தி ருக்கும்!

ஏடெல்லாம் போர்ப்பரணி! எழுது கின்ற
எழுத்தெல்லாம் தீப்பூக்கள்! இளைஞர் உள்ள
வீடெல்லாம் பாசறைகள்! வெப்பம் பொங்கும்
விழியெல்லாம் வேற்படைகள்! பரந்த இந்த
நாடெல்லாம் போர்க்களமே என்று மாற்றி
நடத்துகிறாய் அறப்போரை! பகைவர் நெஞ்சக்
கூடெல்லாம் பொத்தலிலை ஆக்கி விட்டுக்
கொள்கைப்போர் நடத்துகிறாய் இறந்த பின்னும்!

காரெருமை மீதேறும் காலன், வீட்டுக்
கதவிடுக்கில் கைகட்டிக் காத்தி ருந்தான்!
"ஆரடா நீ" யென்றாய்! அச்சத் தோடே
"அய்யா நான் சாவெ"ன்றான்! "முட்டாளே நீ
நேரிலேன் வரவில்லை?" யென்றாய். "உங்கள்
நிழல் பட்டால் நான் சாவேன்." என்றான்! "போபோ
போரில்லா ஒரு நாளில் நீவா" என்றாய்!
புழைக்கடையில் அவன்ஒளிந்து கொண்டான் ஐயா!

எமனுக்கு எமகண்ட வேளை! உன்றன்
எதிரிலவன் வருகின்ற வேளை! அந்த
நமனுக்கும் உன்னிடத்தில் அச்சம் பொங்க
நடத்துகிறாய் அறப்போரை! இந்த நாட்டில்
தமிழுக்குத் தொண்டு செய்வோர் சாவதில்லை!
தமிழ்த் தொண்டர் மறைமலையார் இறந்ததுண்டா?
தமிழர்க்குத் தொண்டு செய வந்த ஒற்றைத்
தன்மானச் சிங்கம் நீ! சாவ தில்லை!

# யாகவா முனிவர்

நீ

காத்திருந்த மக்களுக்குக் கல்கி யவதாரம்

கண்ணிருப்போர் சூட்டுவதோ கவிதையிலே புகழாரம்!

அற்புதங்கள் நிகழ்த்துவதோ அன்றாட வாடிக்கை

விற்பனைக்காய் நிகழ்த்தவில்லை
விளையாட்டாய் நிகழ்த்துகிறாய்.

மந்திரங்கள் ஏதுமில்லை! மாயங்கள் ஏதுமில்லை!

தந்திரங்கள் ஏதுமில்லை! தருமந்தான் உன் வேதம்!

அப்பா என அழைப்பார் அதுவுமொரு புதுமையன்றோ!

எப்பார்க்கும் எத்திசைக்கும் எல்லார்க்கும் நீ காவல்!

மாயைகளின் உடன் பிறப்பே!
மழலைகளின் குணச்சிறப்பே

தாயகத்தின் தவப்பயனே தர்மத்தின் காவலனே!

கிராமத்து மாமுனியே! கிருதயுகக் கண்மணியே!

வராதுவந்த வானகமே! வார்த்தை தொடாப் பூரணமே!

பறவைகளின் உயிர்த்துணையே!
பகுத்தறிவின் தனித்துணையே!

உறவு தந்த பெருந்துறவே! உணர்வு தந்த சற்குருவே!

அம்மன்புரம் கண்திறப்பா! அகிலமென்ன வயல்வரப்பா!

எம் மொழி உன் சொந்த மொழி?
இனன்ய மொழித் தேசமெது?
சூரியனே உன் வீடு! சோதி நிலா தாய் வீடு!
வேரறியாக் கற்பகம் நீ! விதையறியா விளைச்சல் நீ!
தேகமுள்ள தெய்வம் நீ! திசைகளில்லாச் சமுத்திரம் நீ!
சோகமில்லாப் பெருவெளி நீ! சொல்லறியா அற்புதம் நீ!
காற்று வெளிப் பந்தலிலே கால் முளைத்த தாரகை நீ!
கூற்றுவனைத் தினமுதைக்கும்
கொள்கையுள்ள மாமுனி நீ!
தர்க்கங்கள் தூங்குமிடம்! தர்மங்கள் ஏங்குமிடம்!
சொர்க்கங்கள் ஓங்குமிடம் சுடர் நிலவே உனது வசம்!
யாகமெனும் கோவிலிலே யாகவரின் சந்நதியில்
தாகமுள்ள மானுடரே! தலை தாழ்த்த வாருங்கள்!
இறப்பில்லை பிறப்பில்லை! எப்போதும் இன்ப மயம்!
மறப்பில்லை நினைப்பில்லை! மங்கலங்கள் நமது வசம்!

யாதுமாகி நின்றாய் யாகவா
போற்றி! போற்றி! போற்றி!!

## யோகி ராம்சுரத் குமார்

நீ
தாகம் எடுக்கும் ஆறுகளுக்குத்
தண்ணீர் தருகிற வானம்!
நான்
தரையி லிருந்தே அதிலே கொஞ்சம்
தாங்கிக் கொள்கிற ஏனம்!!

நீ
மோகம் எடுக்கும் மூடர்க ளுக்கும்
முத்தம் தருகிற காற்று!
நான்
முள்ளுக் குள்ளே சிக்கிக் கிடந்து
முளைக்கத் தொடங்கும் நாற்று!!

நீ
இரவைப் பகலாய் ஆக்கப் பிறந்த
இந்திர ஜாலக் கிழவன்!
நான்
இருட்டுப் பசுவில் வெளிச்சப் பாலைக்
கறக்க நினைக்கும் சிறுவன்!!

நீ
நீருக்குள்ளே உறங்கிக் கிடக்கும்
நெருப்பைக் கொணரும் சித்தன்!

நான்
நிலையில் லாமல் மேகத் தைப்போல்
அலையும் கவிதைப் பித்தன்!!

நீ
சத்திய மெனும் பொய்கைக் குள்ளே
தத்துவ மாகிய குவளை!

நான்
சாவுப் பாம்பின் படத்தின் கீழே
நிழலுக்கு ஒதுங்கும் தவளை!!

நீ
சன்னதித் தெருவில் அரசு நடத்தும்
சற்குரு வாகிய பெருமான்!

நான்
சந்ததம் கானல் நீரைத் தேடிச்
சலித்துப் போன ஒருமான்!!

நீ
விசிறிக் காம்பைச் செங்கோ லாக்கிய
விசித்திர மான யோகி!

நான்
வீசும் காற்றை வெம்மைப் படுத்தி
வேகும் ஒருசுக போகி!!

நீ
வண்ணத் துணியை மணிமுடி யாக
வளைத்துக் கட்டும் ஞானி!

நான்
வருகிற தென்றல் காற்றிலும் ஆடும்
வலிமை யிலாததோர் தோணி!!

நீ
கண்க ளிரண்டில் கவிதைக் கலையைக்
காட்டப் பிறந்த கவிஞன்!

நான்
கவிதையைத் தேடிக் காடும் மேடும்
காலடி வைக்கும் சுவைஞன்!!

நீ
கங்கைக் கரையில் கண்ணைத் திறந்த
கடவுளின் செல்வப் புதல்வன்!

நான்
கண்ணீர் நதியில் மீனைத் தேடிக்
களைத்த ஒரு செம் படவன்!!

நீ
கொட்டாங் கச்சியில் பிச்சை யெடுக்கும்
கொள்கைச் சக்கர வர்த்தி!

நான்
குன்றத் தடியில் உன்னைத் தேடிக்
கூவும் ஓர்பர தேசி!!

நீ
கடலில் கலந்த இன்னொரு கடலாய்க்
காட்சி யளிக்கும் தர்மம்!

நான்
கண்ணுக் கெதிரே கரைதெரிந் தாலும்
கரையைச் சேராக் கர்மம்!!

நீ
ஸ்ரீராம் ஜெயராம் ஜெயஜெய ராமெனச்
சிரித்துத் திரியும் காற்று!
நான்
சிலநாள் பொங்கிச் சில நாள் மங்கிச்
சித்தம் மயங்கும் ஊற்று!!

நீ
விழியில் உமிழும் மின்சா ரத்தால்
ஒளியைத் தருகிற முனிவன்!
நான்
வெளிச்சத் தீவில் விழியைத் தொலைத்து
விட்டுத் திரியும் மனிதன்!!

## அண்ணல் காந்தியடிகள்

கடவுள் தன் கையில் எப்போதும் வைத்திருந்த
சத்தியத்தின் ஒற்றை விதை காணாமல் போனது!
அதே நேரத்தில்
தர்ம தேவதை பெற்ற தலைப் பிள்ளை அழுத குரல்
போர்பந்தர்க் காரர்கள் எல்லோரும் கேட்டார்கள்.
மானிடத்தைக் காக்கும் ஒரு மகாத்மாவின் வரவை
வரலாற்றாசிரியர் வரவு வைத்துக் கொண்டார்கள்.
ஆமாம் தோழரே!
புத்திலி பாயின் புனிதமிகும் வயிற்றில்
மோகனதாஸ் காந்தி முகிழ்த்துவிட்ட நாளன்று
அக்டோபர் 2
கால காலமாய் இந்தியனைப் பிடித்திருந்த
இருளின் முடிவுக்கு அன்று நாள் குறித்தார்கள்!
புன்னகையால் பகை எரிக்கும் புதுயுகத்தின் புரட்சிநிலா
அடிவானப் பகுதியில் வந்துதிக்கக் கண்டார்கள்!
ஆல மரத்தின் விழுதுகள் போலே
முழங்கா லுக்கும் கீழே தொங்கும்
நீண்ட கைகள்! கைகளா? இல்லை
பூமித்தாய் பாதத்தை நின்று கொண் டேதொட
தோள்கள் அனுப்பிய தூதுவர் அவைகள்!
கண்டவர் எல்லாம் கைகளைக் கூப்பச்
செய்திட வைக்கும் தெய்வ விழிகள்!
விழிகளா? இல்லை!
கருணை எனும்தேன் பார்வையில் சிந்த

இவர்கள்

இயற்கையில் பூத்த இரண்டே பூக்கள்!
ஒடுக்கப் பட்ட ஊமை மக்களின்
உரிமைக் காகவே வெளிவரும் சொற்கள்
சொற்களா? இல்லை!
கள்ள மற்ற வாய்மை என்கிற
வெள்ளைத் தீயில் வெடித்த பொறிகள்!
புதிய போர் முறையை பூமிக்குக் கற்பித்த
அதிசய வீரரே அண்ணல் காந்தி
கடவுளின் வடிவம் சத்தியம் எனக் கண்ட
காவி உடை அணியாத கலியுகத்துப் புதுத்துறவி
அவரோர்
மனிதப் புனிதர்! புனித மனிதர்!

## நாராயண குரு

சதயத்தில் உதயமான
சதுர்மறைச் சுடரே ஏழை
இதயத்தில் இதயம் வைத்த
இரக்கத்தின் வடிவே எங்கள்
உதயத்தின் இமயம் நீதான்
உலகத்தின் ஒளியும் நீதான்
கதியற்ற கடைய ருக்கும்
கடைத்தேற்றம் என்றும் நீதான்!

கதவினுக் கப்பால் நின்று
கைதொழும் புலையன் வாழ்வில்
முதன் முதல் வெளிச்சம் தந்த
முதல் வன் நீ! முனிவன் நீதான்
மத வெனும் சழக்கை விட்டு
மனிதரை மீட்ட உன்றன்
உதவியைப் பாடுதற்கே
ஒரு நூறு வாய்கள் வேண்டும்

பண்டைநாள் சித்தர் அந்தப்
பதினெட்டுச் சித்தர் தம்மைக்
கண்டவர் யாரு மில்லை
கண்ணெதிர் வந்த சித்தன்
அண்டையில் வந்தே எம்மை
ஆட்கொண்ட புதிய சித்தன்
தண்டமிழ் வல்ல எங்கள்
தமிழ்ச்சித்தன் நீயே யன்றோ!

ஏய்ப்பர்கள் குருக்க ளுக்குள்
எத்தனை கோடி நல்ல
மேய்ப்பர்கள் உண்டா இந்த
மேதினில் கண்ட துண்டா
மேய்ப்பரில் நீயோர் மேய்ப்பன்
இளமையில் ஏசுவைப் போல்
மேய்ப்பரும் ஆனாய்! பின்னர்
மேதினி மேய்ப்பன் ஆனாய்!

ஒளிவிடும் திருமுகத்தை
ஒரு தரம் பார்த்து விட்டால்
தழல் உமிழ் புலியும் கூட
தாய்ப்பசு ஆகும்! என்றும்
நிழல் தரும் விருட்சம் நீதான்!
நெஞ்சுக்குத் தெய்வம் நீதான்
கழல் தரும் குருவே உன்றன்
கண் பட்டார் ஞானி யாவார்!

தவமெலாம் திரண்டு வந்த
தனிப்பெரும் தவமே! எங்கள்
அவமெலாம் போக்கு கின்ற
ஆனந்தப் பெருக்கே! வார்த்தை
நவநவ மாகத் தந்த
நாரண குருவே! அந்தச்
சிவகிரி போலே எங்கள்
சிந்தையில் அமர்க ஐயா!

# இரத்தினகிரி பாலமுருகனடிமை

## (இசைப்பாடல்)

**தொகையறா**

*ஞானத்தின் தீபமே! ஞாலத்தின் சோதியே!*
*நற்றமிழ் ஆய்ந்த மனமே!*
*வானத்தைத் தரையிலே வர வைக்கும் அண்ணலே*
*வையகம் போற்றும் குருவே!*
*தேன் தமிழ் மன்றிலே திளைக்கின்ற புகழிலே*
*தேவனெனை வைத்த தேவே!*
*மான் மகள் வள்ளியின் மனங்கவர் முருகனிடம்*
*மனம் வைத்த ஞானி வாழி!*

**பல்லவி**

*யார் தருவார் இந்த உயராசனம் கவி*
*யரசாக எனையாக்கும் தமிழாசனம்!*

**சரணம்**

*பேர் கொண்ட நூல்கள் பல கல்லாதவன்! சிறந்த*
*பெயர் பெறக் குறள் வழியில் நில்லாதவன்!*
*சேரும் சபை யறிந்து சேராதவன்! நல்ல*
*செழுந்தமிழ்க் காவியங்கள் பாராதவன்!*

*(யார் தருவார்.....)*

திருமணிக் குன்றமென்ற பெயர் கூறினேன்! அன்று
தீந்தமிழ்க் கவி ஒன்று நான் பாடினேன்!
திருமிகும் சுவாமியவர் எனை நோக்கினார்! உடன்
திருமகள் தேடி வந்து அரசாக்கினாள்!

(யார் தருவார்......)

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

*திரு நெறிய தமிழ்காக்க முழக்கம் செய்யும்*
*திருத்தொண்டர், சம்பந்த வள்ளல், உள்ள*
*மருள் நீக்க வந்திருக்கும் அப்பர் எங்கள்*
*மனக் கதவு திறக்கவரும் அன்புத்தென்றல்!*
*கருணை யெனும் தேன் துளியைச் சிந்து கின்ற*
*கண்மலரார் மாணிக்க வாச கத்தார்*
*திரு நீற்றின் ஒளிபரப்பும் தெய்வத் தோற்றச்*
*சிவப்பொலிவுச் சுந்தரனார் அடிகள் வாழ்க!*

*தனியடியார் தொகையடியார்*
*வாழ்ந்த நாட்டில்*
*தமிழடியார் இவரொருவர்,*
*அடியார்க் குள்ளும்*
*தனியடியார்; "இவரிருக்கத்*
*தமிழன் நெஞ்சில்*
*தன்மான உணர்வினிலே*
*பகைவர் வந்து*
*இனியடியார்" என்றுரைப்பர்*
*அடியா ரெல்லாம்!*
*இணையடிகள் துணையென்று*
*ஏத்தி நிற்பர்!*
*இனியடிகள் அடியொற்றி*
*நடந்து செல்ல*
*எங்களது தமிழுலகம்*
*விழைந்த தம்மா!*

காவியுடைக் குள்ளிருக்கும்
புதுமை உள்ளம்
கண்டவர்கள் இவர்
புரட்சி துறவி என்றார்!
பாவிரித்துப் பொருளுரைக்கும்
பாங்கு கண்டோர்
பட்டிமன்ற நாயகரைப்
பாரீர் என்றார்
காவியத்துப் பேரறிஞர்
என்ற தாலோ
காவி உடைக்குள்
புரட்சி கண்டதாலோ
சோவியத்துப் பேரரசே
அழைத்த தம்மா
சொல் வல்லார் புகழிங்கு
சொல்லப் போமோ?

ஒத்தாரும் தாழ்ந்தாரும்
உயர்ந்தா ரோடு
ஒரு சேர உலகியலில்
வெற்றி கொள்ள
முத்தான கருத்துக்கள்
அளிக்கும் மேதை
முனிவரிவர் சமுதாய
முனிவ ரன்றோ!
சித்தார்த்தன் அன்றிருந்தான்
அவனுக் குப்பின்
சிந்தனையில் மறுமலர்ச்சி
செய்வ தற்கு
வித்தானார் தமிழகத்தில்,
தமிழர் வாழ்வின்
விழுச்செல்வம் தானானார்
என்றும் வாழ்க!

காலத்தை வென்ற மொழி
தமிழைக் கற்ற
கடல் குடித்த அகத்தியனைக்
கண்ட தில்லை
ஞாலத்தில் நற்றமிழைக்
காப்ப தற்கு
நாம் வாழும்
காலத்தில் வந்துதித்த
சீலத்தார் துறவறத்தார்
இவரே என்போம்
சீருடைய குருமணியும்
இவரே என்போம்
சீலமிகு துறவேற்றுச்
சென்ற போதும்
செந்தமிழைத் துறவாத
அடிகள் வாழ்க!

## பேரறிஞர் அண்ணா

கருப்புமலர் பூக்கின்ற கழகம் கண்ட
கருஞ்சட்டை வெண்தாடி வேந்தர் இங்கோர்
நெருப்புமலர் பூக்கின்ற சோலை என்றால்
நிலவுமலர் பூக்கின்ற பொய்கை நீ தான்
பருப்புமலர் பூத்ததென்று பார்ப்பார் முன்னே
பகுத்தறிவு மணமெங்கும் பரப்ப வந்த
சிரிப்புமலர் காட்டியவன் நீதான் அண்ணா
சிந்தனைப்பூ விழிக்குளத்தில் பூத்தி ருக்கும்!

கொட்டிவைத்த சிறுமலராய்த் தமிழ ரெல்லாம்
கூடிவந்த நாட்களிலே சாதிப் பேய்கள்
எட்டிஉதை விட்டதனால் மூலைக் கொன்றாய்
எங்கெங்கோ போய்விட்ட பின்னால் இங்கே
கட்டிவைக்க நீஒருவன் வந்தாய் உன்றன்
கருணையினால் தமிழினக் கூட்டுறவைக் கண்டோம்!
கட்டிவைத்த பூமாலை இங்கி ருக்க
கடற்கரையில் உனக்கென்ன வேலை அண்ணா!

சேமித்து வைத்திருப்போம் உலகம் எங்கும்
செந்தமிழே ஆட்சிமொழி ஆகும் நாளில்
காண்பிக்க வேண்டுமென இயற்கை அன்னை
கருப்பைக்குள் உனைப்பதுக்கிக் கொண்டாள், இன்றோ
காண்பித்தால் போதுமடி அவன் முகத்தைக்
காட்டிவிடு ஒருதரம் நீ எனச்சொன் னாலும்
பூமிப்பெண் வாய்திறந்து சிரிப்ப தில்லை
புதைகுழியோ கொட்டாவி விடுவதில்லை!

இறவாத இலக்கியம் நீ அண்ணா! எங்கள்
இதயத்தின் துடிப்பொலியே உன்பேர் தானே!
திறவாத புத்தகமாய் விழியி ருக்க
திரைகடலின் தாலாட்டில் தூங்கு கின்றாய்
மறவாமல் உனைப்போற்றும் நாள்வ ரைக்கும்
மாநிலத்தில் எங்களுக்கும் அழிவே யில்லை
பிறவாதார் என்றைக்கும் இறப்ப தில்லை
பிறந்தாலும் இறவாத பெரியோன் நீதான்!

## புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர்.

அரியானை, அன்பர்கள் தம் சிந்தை யானை.
அழகொளிரும் முகத்தானை, அருள் கொண்டானை!
விரிவானை நிகர்க்கின்ற நெஞ்சத் தானை
விடி வெள்ளி யானானை, புலவர் பாட
உரியானை, உழைப்பாலே உயர்ந்தான் தன்னை
ஊர்க்கெல்லாம் ஒளிவிளக்காய் வந்தான் தன்னை
பெரியானை, எம்.ஜி.ஆர் எனும் பேரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!

சந்திரன்தான் ஆனாலும் நிலவைப் போலே
தண்ணொளியைப் பிறரிடத்துப் பெற்ற தில்லை!
செந்தமிழர் வானத்துக் கதிரும் கோளும்
செவ்வொளியை இவனிடத்தில் வாங்கக் கண்டோம்
சந்திரன் தான் ஆனாலும் நிலவைப் போலே
சத்தியமாய்த் தேய்வதில்லை! ஏழை வானில்
இந்தநிலா வீசும் அருள் ஒளியி னாலே
என்றைக்கும் பௌர்ணமி தான்! இருளே இல்லை!

பூக்களுக்குப் புன்னகையைக் கற்றுத் தந்தான்!
புவியோர்க்குப் பொன்மனத்தைக் கற்றுத் தந்தான்!
நாக்களுக்குக் காஞ்சிதந்த தெய்வம் அண்ணா
நாமத்தைத் தினமுரைக்கக் கற்றுத் தந்தான்!
கோக்களுக்கும் கோவேந்தர் குடிக்கும் கூட
குறைவின்றிக் கோலோச்சக் கற்றுத் தந்தான்!
வாக்களிக்கும் தமிழ்க்குடிக்கு வாத்தி யாராய்
வந்தமகன் சொல்லித்தான் வளத்தைக் கற்றோம்!

பொன்னெல்லாம் பொதுவுடைமை என்பான், ஆனால்
புகழெல்லாம் தனியுடைமை ஆக்கிக் கொள்வான்
இன்ன பிற முரண்பாட்டால் ஏழை மக்கள்
இதயமெலாம் இவன் புகழின் கல்வெட் டாகும்!
கண்ணெல்லாம் இவனுருவை அறியும், எங்கள்
காதெல்லாம் இவன் புகழே நிறையும்! இந்த
மண்ணெல்லாம் இவன் வரவால் உயரும்! பூக்கும்
மலரெல்லாம் பேர் சொன்னால் வாசம் கூடும்!

## கர்மவீரர் காமராஜர்

*காலைக்குக் கதிரோன் உண்டு!*
*களைப்புக்கு மலைத்தேன் உண்டு!*
*சோலைக்கு ரோசா உண்டு*
*சுகத்துக்குத் தென்றல் உண்டு*
*"நாளைக்கு வாழ்க்கை யுண்டா*
*நமக்கெல்லாம் ?" என்றி ருந்த*
*ஏழைக்குக் காம ராஜர்*
*என்பவர் ஒருவர் உண்டு!*

*கருப்பிலே தங்கம் உண்டா?*
*காமராஜ் அங்கம் உண்டே!*
*நெருப்பிலே நெஞ்சம் உண்டா?*
*காமராஜ் தூய்மை உண்டே!*
*பிறப்பிலே மேதை உண்டா?*
*பேச்சிலே வைரம் உண்டா?*
*இறப்பிலா இமயம் ஆனார்*
*இடத்திலே எல்லாம் உண்டு!*

*அரும்பிலே இருந்த போதே*
*ஆயிரம் தியாகம் செய்த*
*பெரும்புகழ்த் தலைவன் பேச்சைப்*
*பேசினால் வாய் மணக்கும்!*
*வரும்படி தன்னைத் தேடா*
*வாழ்வுடைத் தொண்டன் கீர்த்தி*
*வரம்பிலே அடங்கும் என்றால்*
*வார்த்தைக்கும் சிறித டங்கும்!*

படிக்கலாம் கலைகள் நூறு!
பழகலாம் தியாகம் செய்ய!
படைக்கலாம் அற்பு தங்கள்!
பதிக்கலாம் சுவட்டை எங்கும்!
துடைக்கலாம் ஏழை கண்ணீர்!
துணியலாம் சிறைக்குச் செல்ல!
வடிக்கலாம் கல்லில் பேரை!
வரையலாம் சரித்தி ரத்தை!

ஏகலாம் காடு நோக்கி
இருக்கலாம் நெருப்பின் மேலே!
சாகலாம் நாட்டுக் காக
சகிக்கலாம் கொடிய துன்பம்!
போகலாம் சொர்க்கம்! ஆனால்
புகழ்ச்சிவ காமி மைந்தன்
ஆகலாம் எனநி னைத்தால்
அதுமட்டும் கனவே யம்மா!

தனக்குநேர் தானே யானான்
தமிழ்க்குநேர் தமிழா னாற்போல்!
தனக்கொரு வாழ்க்கை இன்றித்
"தாய்த்திரு நாட்டின் வாழ்க்கை
எனக்கொரு வாழ்க்கை" யென்றான்;
என்பதாற் சாவை வென்றான்!
கணக்கிட முடியா அண்ணல்
கவிதைக்குள் கொஞ்சம் நின்றான்!

## பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்

தூங்கிக் கிடந்த நம் தூக்கத்தைப் போக்கிடத்
தோன்றிய வீரரவர் - கதிர்
போன்றிடும் தீரரவர் - நாட்டில்
ஓங்கி எரிந்திட்ட ஒப்பறு வேள்வியின்
உள்ளுக்குள் வாழுபவர் - எங்கள்
உள்ளத்தை ஆளுபவர்.

நீறுது லங்கிடும் நெற்றியின் தோற்றமும்
நெஞ்சைக் கவர்ந்திடும் காட்சி - அருள்
நெஞ்சை விளக்கிடும் மாட்சி - சிங்க
ஏறென நின்றவர் எம்மவர் உள்ளத்தை
இன்புற ஆண்டிடும் காட்சி - கண்டு
துன்புறும் வெள்ளையர் ஆட்சி.

நாட்டுக்கு நாயகர் நற்றமிழ் நாயகர்
நற்றவ வித்தக ஞானி - அன்பர்
பற்றிடும் நல்லறத் தோணி - அருட்
பாட்டுக்கு நாயக னாகிடும் வேலவன்
பாதம லர்க்கொரு தேனீ - எனப்
பாடிடுவோம் தம்பி வா நீ!

# அண்ணல் அம்பேத்கர் அந்தாதி

தேன்மொழியே கேளிதுதான் தீராதி தீரனெங்கள்
ஆண்டகையாம் அம்பேத்கர் நூற்றாண்டு-கூண்டுவிட்டுச்
சிங்கம் எழுந்துவந்த சீர்த்திமிகும் நூற்றாண்டில்
எங்கும் அவர்புகழைக் கேள்!

கேளம்மா அம்பேத்கர் கீர்த்திதனை, நானூறு
நாளம்மா போதாது நானுரைக்க - வாளம்மா
நுண்ணறிவு அந்த நுழைபுலத்து நாயகர்க்குக்
கண்ணிரண்டும் காந்தக் கடல்!

காந்தக் கடல்தான் கண்ணெதிரே காணுகின்ற
மாந்தக் கடலிழுக்கும் மந்திரம்தான் - சாந்தமகான்
நெற்றிப் பரப்பும் நிறைகருணைத் திருவிழியும்
இற்றைக்கும் வாழும் எழில்!

எழிலுக்கும் எங்களுயிர் இந்தியத்தாய் வாழ்க்கைப்
பொழிலுக்கும் நீரான புண்ணியன்காண்!-தொழிலுக்குச்
சட்டம் படித்தமகன் தாழ்வுற்ற மக்களுக்கு
முற்றும் அவனே முதல்!

முதல்நாள் அறைப்புகுந்து மூன்றாம்நாள் வந்த
உதயம் வரைக்கும் உறங்கா (து) - இதயமெல்லாம்
கல்விக்கே அர்ப்பணித்த கண்ணே! கலைமகளாம்
செல்விக்கு நீயன்றோ சேய்!

சேய்வேண்டும் எம்மினத்தின் சார்பாய்க் குரல்கொடுக்க
வாய்வேண்டும் என்பார்க்கு வாய்த்தவனே! -கோவேந்தர்
காலமுதல் ஆட்டமிட்ட காட்டேரி யாம்சாதி
தோலுரியக் கண்டதுன் தொண்டு!

தொண்டுக்கோர் சாதி துரைத்தனத்துக் கோர்சாதி
பண்டை வழக்கமென்ற பல்லவிகள் - தொண்டையிலே
விக்கும் படிநீ விழித்தவுடன் சாதிஉயிர்
கக்கும் படியாச்சு காண்.

காணும் திசையெல்லாம் கற்பி! உடன் ஒன்றுபடு!
பூணும் உரிமைப் புரட்சி செய்! - மானுடத்தின்
அங்கம்நீ! மண்ணல்ல! ஆமையல்ல! என்றுரைத்த
தங்கம்நீ! என்றன் தமிழ்!

தமிழுக்குச் சாவில்லை! தண்டமிழே! சாவுச்
சிமிழுக்குள் நீயடங்க மாட்டாய்! - உமிழுமுன்றன்
வாய்நீர் அமிலமையா, வாய்திறந்து நீபருகும்
தேநீரும் சூரியனின் சாறு!

சாறு பிழிந்தெடுத்த சக்கையென வந்தவர்க்கு
வீறு தரவந்த வித்தகனே! - ஏறுநிகர்
அம்பேத்கர் என்னும் அறிவுலகப் பெம்மானே
தெம்பூட்டும் உன்வாய்ச்சொல் தேன்!

## தோழர் ஜீவா

இடிஇடிக்கும் வானமொன்று
    தரையிறங்கி வந்ததோ!
ஏழைமக்கள் பகைவர்மீது
    கனல்பரப்பி நின்றதோ!
குடையெடுத்த சேரமன்னன்
    நடைபடைத்த பான்மையோ
குற்றவாளி கடவுளேனும்
    விட்டிடாத ஆண்மையோ!

மானுடத்தின் ஜீவனிங்கு
    மனிதனாகி வந்ததோ!
மதங்கள்சாதி பேதமற்ற
    மனிதநீதி தந்ததோ!
ஆணவத்து மூடர்முன்பு
    சிங்கமாக நின்றதோ!
ஆருமற்ற பாமரர்க்குத்
    தோழனாகி வென்றதோ!

உலக மாந்தன் என்ற போதும்
தமிழில் ஆசை கொண்டதோ!
உலகஞானி கம்பன் என்ற
உண்மை தன்னை விண்டதோ!
நிலவுமீது சென்றி டிக்கும்
தலைப டைத்த மானுடன்
நிகரிலாத ஆண்மை யாளன்
ஜீவா னந்தம் வாழ்கவே!

# மாவீரர் செண்பகராமன்

சுதந்திரக் காற்றின் சுவாசத்திற் காகப்
பறவை ஒன்று பறந்து சென்றது!
அன்னை நாடு அடிமை நாடானால்
அடுத்த நாட்டுக்கு அடிக்கடி சென்று
சுதந்திரக் காற்றைச் சுவாசிக்க விரும்பும்
உரிமைப் பறவையின் இதய வேட்கை
இன்றைக்கு மட்டும் ஏற்பட்ட தன்று!
இங்கு திரியும் காற்றைக் கேட்டாலும்
இப்படிச் சான்றுகள் ஆயிரம் கொடுக்கும்!

அன்றைக் கோர் நாள்,
வெள்ளை வேதாளம் இறங்க மறுத்த
முருங்கை மரமாய் இந்தியா இருக்கையில்
விவேகத்திற் சிறந்த விக்கிரமா தித்தர்கள்
வேதா ளத்துக்குக் கோபம் வராத
விடைகளை மட்டும் விளம்பிய காலம்!

பிள்ளையாரைப் பிடித்த சனியன்
அரச மரத்தையும் ஆட்டிய தைப்போல்
பிரிட்டனைப் பிடித்த கலகப் பேய்கள்
இந்தியா வையும் உலுக்கிய சமயம்!

அன்றைக் கோர் நாள்,
சென்னை நகரமே சிதறி ஓடத்
துடித்துக் கொண்டிருந்தது! காரணம் என்ன?

எமனுக்குப் பிறந்த எம்டன் என்கிற
நீர்மூழ்கிக் கப்பல் நெருங்கிக்கொண் டிருந்தது!
அந்தச்
செருமானியக் கப்பலைச் சிறப்புடன் இயக்கிய
தலைமைப் பொறியாளன்! தமிழ் மறச் சிங்கம்!
காற்றுக்குக் கூட உரிமைப் பாடத்தைக்
கற்றுக் கொடுத்த விடுதலை வீரன்
கொட்டிக் கொண்டிருந்த வெள்ளைத் தேளின்
கொடுக்கை நறுக்கிய கொடுவாள் மறவன்!
கண்படும் வரைக்கும் கடமையை ஆற்றிய
செண்பக ராமன் வந்துகொண் டிருந்தான்!

அவன்!
தாளாள ராகித் தமிழ்க்குரிமை தாங்கிவரும்
வேளாளர் குலத்தின் வீர விளைச்சல்!
திருவனந்த புரத்துத் தீந்தமிழ்க் குடியில்
உருவம் எடுத்து உலவிய துணிச்சல்!
காட்டை ஆராய வந்த சாக்கிலே
நாட்டின் நாடியைப் பார்க்க வந்திருந்த
செருமனி நாட்டின் சிறந்த பேரறிஞன்
வில்லியம் டீக்லாண்டு விழிகளில் பட்டான்!

கடத்திச் சென்றவன் காற்றுக்குப் பிறந்தவன்
கடத்தப் பட்டவன் கனலுக்குப் பிறந்தவன்!

இந்த உறவின் பயனாய்
எட்டுத் திசையும் சுற்றி யிருந்த
வெள்ளை யிருட்டு வேகமாய் எரிந்தது!
செருமனி! அந்தத் தேசமே வியந்தது!
செண்பக ராமன்
பற்பல மொழியில் பண்டிதன் ஆனான்.

இலக்கியம் இவனுக்கு இன்கனிச் சாறு!
பொருளா தாரமோ பொங்கிய சோறு!
இருப்பினும்,
எந்திர இயலும், தந்திரப் பொறியின்
மந்திரச் செயலும் இவனை இழுத்தன!

இப்படி
முரண்பட் டிருக்கும் முன்னூறு கலைகள்
மோதிக் கொள்ளாத மூளையைப் படைப்பது
நாஞ்சில் நாட்டுக்கே வாடிக்கை போலும்!
(நல்ல பெருமாள் நல்ல உதாரணம்)

அவன் பேசிய பேச்சும் பெருந்தீ மூச்சும்
வீசிய வீச்சும் கலந்து விரைந்ததால்
ஆங்கிலக் கால்வாய் என்கிற அந்தச்
சாக்கடை கூட கொந்தளிப் படைந்தது!
தாயின் விலங்குகள் தாமாய் உடையும்
என்ற பொய்யை இவன் நம் பாதவன்.
எனவே படையை ஏற்ப டுத்தினான்
இவனே அதற்குத் தளபதி ஆனான்!

காபூல் என்பது பாரத வீட்டின்
கதவுக்கு அருகே இருந்ததோர் முற்றம்!
அந்த
முற்றத்தில் இருந்தே முதுபெரும் நாட்டின்
கொற்றத்தை நடத்திக் காட்டுவேன் என்றான்!
முதலாம் தேசிய அரசு முகிழ்த்தது!

எப்பெயர் சொன்னால் என்இதயம் துள்ளிச்
செப்பிய வாய்க்குள் செந்நீர் சிந்துமோ
அப்பெயர் போஸ்! அவன் அமைத்த படைக்கும்
முற்பட ஓர்படை அமைத்தவன் இராமன்!

இவன் போன்றோர்க்கு இந்தியா கொடுத்தது
வன்முறை யாளன் என்பதோர் பட்டம்
வீட்டுக் கொருவர் ராட்டினம் சுற்றினால்
'விடுதலை அடையும் நாடு' எனச் சொன்ன
காந்தியைப் பார்த்துக் கப்ப லோட்டிய
தமிழன் சொன்னது நினைவிருக் கிறதா!
'வாளேந்தும் தமிழன் கை நூல் ஏந்தாது'!
ஆகவே இவர்கள் வன்முறைக் காரர்கள்!

செண்பக ராமனைத் தெரியாமல் போனது
மித வாதிகளின் ஜாதகத்தில் மட்டுமே
விளம்பர யோகம் இருந்ததன் விளைவு!
அந்த
மிதவா திகளின் மேன்மையைக் காக்கவே
உயிரை விட்டவன் செண்பகராமன்!
எப்படி இந்த வரலாற்றுப் பின்னல்?

இட்லர், இவன்பெயர்
ஏழு கடலையும் சுவற அடிக்கும்!
அப்படிப் பட்டவன் ஒரு நாள் விருந்தில்
இந்திய தேசியத் தலைவரை எல்லாம்
ஏசினான்! உடனே, வெகுண்டார் ராமன்!
'மன்னிப்புக் கேளடா மடையா', என்று
தன்னிக ரில்லாச் சிங்கம் கேட்டது!

அறுபது லட்சம் யூதரைக் கொன்றவன்
அவன் பெயர் இட்லர்!
அவனைப் பார்த்தா இப்படி ஆணை!
சர்ச்சிலும் ஸ்டாலினும் சொல்ல முடியுமா?
அப்படிச் சொல்ல
ஐந்து கண்டத்தும் ஆட்கள் இல்லையே!
அவன்அரண் மனைக்குள் அவனுக் கெதிரே
சிவன்போல் சீறச் செண்பக ராமனால்
மட்டுமே முடியும்!
இட்லரின் அருகே இருந்த துப்பாக்கிகள்
பேசுவதற் காகத் துடித்துக் கொண்டிருந்தன!
மயான அமைதிஅம் மன்றிலே இருந்தது;
வாயைத் திறந்தான் வணங்கா இட்லர்
மன்றம் அறிய மன்னிப்புக் கேட்டான்!

செருமனிக் கேஒர் செல்லப் பிள்ளையாய்
செண்பக ராமன் இருந்த காரணத்தால்,
அங்கே கடிக்கப் பயந்த பாம்பு
அடுத்த நாளே விஷம்கக் கியது!
மொத்தமாய் அல்ல கொஞ்சம் கொஞ்சமாய்
உணவிலே நஞ்சை ஊட்டி விட்டனர்!
பேடிகள் கூடிப் பெரியதோர் வேழத்தைக்
கொன்றதை உலகம் கூசிப் பார்த்தது!

அவன் இறுதி ஆசை என்ன தெரியுமா?
எரிந்த சாம்பலை இன்றமிழ் நாட்டுக்
கரமணை ஆற்றுக் கரையிலே, வயலிலே
தூவ வேண்டும் என்பதே யாகும்!
பற்பல ஆண்டுகள் பறந்த பின்னால்
இந்த விருப்பம் ஈடேறி யுள்ளது!

இது போல் விருப்பத்தை எங்கோ கேட்ட
நினைவிருக் கிறதா? நேருவின் உயிலில்
எழுதப் பட்ட வாசகம் இதுதான்!
ஆமாம்,
நேருஜி என்றால் நினைவிருக் கிறது
செண்பக ராமன் யாரவன் என்கிறோம்!
அசலைப் பற்றிய அறிவே இல்லை
நகலொடு தானே நமக்குப் பரிச்சயம்!

செண்பக ராமா! செப்பக் கேளிங்கு
மக்கள் என்பவர் வடதிசை மாக்கள்!
மொழியெனப் படுவதோ மூளி இந்திதான்!
சமவெளி என்பது கங்கைச் சமவெளி!
சான்றோர் என்பவர் பூரி உண்பவர்!
இப்படி இருக்கும் இந்திய நாட்டில்
உன்னைத் தேட ஒருப்படு வோர்யார்?

ஆழ்வார் அருளிய அருள்நெறி தானே
மோகன தாசின் மூல மந்திரம்!
தமிழக வைணவம் தந்த பிச்சைதான்
பாரத நாட்டின் பண்பா டாகும்!

சிதம்பர னாரைத் தெரிந்துகொண் டிருக்கும்
பீகார் உத்தரப் பிரதேஷ் உண்டா?
செண்பக ராமா!
இப்போ திருக்கும் சரித்திர ஏட்டைக்
கொளுத்திய பிறகுதான் நியாயம் பிறக்கும்!

அந்தச்
சாம்பலில் உனக்குச் சரித்திரம் எழுதுவோம்!
அதுவரை.............
கரமனை ஆற்றுக் கரையிலே தூங்கு!

# தமிழர்தந்தை ஆதித்தனார்

1. என்றுமுள செந்தமிழை எங்களுயிர் என்று நிதம்
கொண்டு புகழ் கொண்டதொரு சிந்தை - அதைக்
கொண்ட மகன் செந்தமிழர் தந்தை!

2. ஆதித்த னாரென்ற பேருக்குள் உள்ளதொரு
அஞ்சாத செந்தமிழர் சிங்கம் - அதன்
ஆவிக்குள் தமிழ் வீரம் பொங்கும்!

3. நாம் தமிழர் நாம் தமிழர் நாம் தமிழர் என்கின்ற
ஞானத்தைத் தரவந்த வேதம் - பேரை
நாம் சொல்ல நரம்புகளில் கீதம்!

4. மண்ணுக்கு உடலென்றும் தமிழுக்கு உயிரென்றும்
மகராசன் தந்ததொரு பாதை - இந்த
மண்ணுக்கு அது தானே கீதை!

5. கல்லுக்கும் தமிழ்மானம் காற்றுக்கும் தமிழ்வீரம்
கற்பிக்க வந்ததொரு சூரன் - தாய்
கனகத்தின் மகனிந்த வீரன்!

6. தவஞ்செய்த தவமாகத் தமிழ்தந்த வரமாகச்
சிவந்திக்கு மகனான செல்லம் - ஒரு
சிறுத்தைக்கு நிகரந்த உள்ளம்!

7. தலையாட்டும் கலைகற்ற தன்காலத் தமிழர்க்குத்
தமிழ்நாட்டின் புகழ்சொன்ன ஞானி - வீர
விளையாட்டின் உயர்வுக்கோர் ஏணி!

8. வைக்கோலில் தாள்செய்து செய்தித்தாள் வரவைத்த
வரலாற்று நாயகனின் தொண்டு - கண்டு
வையகமும் விம்மியது உண்டு!

9. தாழ்ந்ததமிழ் நாட்டுக்குத் தலைநிமிர்வு தரவேண்டித்
தான்தந்த வாள்அந்தத் தந்தி - அது
தமிழ்ப் பகைவர் நெஞ்சுக்குச் செந்தீ!

10. சத்துள்ள தமிழ்மொழியில் சட்டத்தைத் தரவந்த
சட்டசபை நாயகச் செம்மல் - அவர்
தந்தகொடை தமிழ்த்தாய்க்குக் கம்மல்!

11. அய்யாவின் வீச்சுக்கும் அண்ணாவின் பேச்சுக்கும்
அரணாக வந்ததொரு மூச்சு - அது
அன்றாடம் போட்டதெதிர் நீச்சு!

12. ஆதித்தனார் இங்கு சாதித்த சாதனைகள்
யாரெண்ண முடியுமடி தோழி! - அடி
அச்சாரம் மட்டுமொரு கோடி!

13. ஆண்டாண்டு போனாலும் அணையாத ஒருதீபம்
ஆதித்தர் புகழ்வாழ்க தோழி! - அவர்
ஆவேசத் தமிழ்நெஞ்சம் வாழி!

# அன்னை இந்திரா

இந்தியக் கலைவிழா இலண்டனில் நடந்தது
இறுதி நிகழ்ச்சி தேசிய கீதம்
நூற்றுக் கணக்கில் இன்னியம் முழங்க
ஆற்றுப் பெருக்காய்க் கீதம் எழுந்தது!

ஆண்ட இனத்தார் மாளிகை வாசலில்
அடிமையைத் தளையை அறுத்தவர் பாடினார்!
அலைஅலை யாகப் பாய்ந்தது கீதம்!
தலைகள் எல்லாம் தாமாய் நிமிர்ந்தன!

அந்த நேரத்தில் அங்கொரு பெண்மகள்
அழகிய விழியில் ஆனந் தத்தால்
கண்ணீர் முத்துக்கள் களித்துத் திரண்டன!
கன்னப் பரப்பிலே விழுந்தவை உருண்டன!
அந்தப் பெண்யார்? யாரவள்? அவளே,
அவளே அன்னை இந்திரா காந்தி!

"நிலவைக் காட்டி எத்தனை அழகு
நீபார்", என்று மற்றவர் உரைக்கையில்
"நிலத்துக்கு மட்டும் என்ன குறைச்சல்?
நிலவைக் காட்டிலும் அழகிதில் இல்லையா"!
என்ற கேள்வியை இளமையில் கேட்ட
மண்ணின் திருமகள் மாதவச் செல்வி!

பெண்ணின் விளைச்சலாய் எண்ணுவ தைவிட
மண்ணின் விளைச்சலாய்த் தன்னை நினைத்தவள்!
ஆண்களுக் கெல்லாம் ஆண்மை வழங்க
ஆண்டவன் அனுப்பிய அதிசயப் பெண்மை!

வேறுள குழுவை மானுடம் வெல்ல
விழிகளால் சொல்லிய வீரத் திருமகள்!
வெள்ளைத் தாமரை விட்டவள், இந்தியர்
உள்ளத் தாமரை உட்கார வந்தவள்!
ஆசிய ஜோதி அவர்பெற் றெடுத்த
தேசிய ஜோதி தேவதை இந்திரா!

# ராஜீவ் காந்தி

வெண்ணிலவின் வெளிச்சத்தை வெண்பனியில்வடி கட்டிக்
கண்ணிரண்டில் பார்வையென்று காட்டுகின்ற திருத்தோற்றம்!
பின்னிரவுப் பொழுதுகளில் பேசவரும் இளங்காற்றின்
மென்மையிலே தலைதுவட்டும் தன்மையுள்ள ஒரு பார்வை
பச்சைக் குழந்தையொன்று பாலொழுகும் வெண்ணிறத்தில்
ஆடையுடுத்திவரும் அழகுத் திருக் கோலம்!
வெள்ளை முயல் என்று விளையாட்டாய் நினைப்போர்க்கு
நல்லறிவு புகட்டுகின்ற நளினச் சிறுமுறுவல்!
சுற்றியுள்ள பகைக்கெல்லாம் சோர்வுவரச் செய்கின்ற
வெற்றித் திருவீரம் விளையாடும் இளையமுகம்!
தேவியவள் பாரதத்தாய் திருப்பாத சேவைக்குக்
கூவியழைக் கின்ற கொள்கைத் திருநெஞ்சம்!

எதைநோக்கிப் பார்த்தாலும் அதற்குள்ளே ஊடுருவிப்
பதம்பார்க்கத் தவறாத பக்குவஞ்சேர் மதிநுட்பம்!
அடித்து வருத்தாமல் அனைத்து மனிதரையும்
அணைத்தே திருத்துகின்ற அன்புத் திருக்கரங்கள்!
திருநாட்டின் ஊர் எல்லாம் திருப்பதிகள் எனநினைத்து
வலம் நாட்டில் வரத்துடிக்கும் வாலிபத்தின் புதுவார்ப்பு!
ஆழ்கடலின் பேராழம்! அதில்நிலவும் பேரமைதி!
ஊழ் எதிர்க்கும் உளத்துறுதி! உழைப்பதிலே பேரார்வம்!
இத்தனையும் சேருங்கள்! இந்திரா எனும்தாயின்
புத்திரன் ராஜீவ் புகழ் வடிவம் பாருங்கள்!

இளை தலைவனே!
ராஜ சபைகளுக்கு ராஜீவாய் வருபவனும்
களைத்த ஏழைக்குக் காந்தியெனத் தெரியவனும்
நீ என்ற காரணத்தால் நிகழ்காலம் உனைப்பார்த்து
ராஜீவ் காந்திஎன வாஞ்சையுடன் அழைக்கிறது!

நீ
நிமிரும் நிமிர்ச்சியிலே நேர்மை நிமிர்கிறது!
அடங்கும் பணிவினிலும் ஆண்தகைமை தெரிகிறது!

தாத்தா நேரு
மார்பிலே பூக்களைச் சூடிக்கொண் டிருந்தார்!
பேரன் நீயோ
பூக்களின் மார்பில் சூடப் படுகிறாய்!

அன்னை இந்திரா என்கிற தீபம்
சத்தியத் தாலே ஏற்றப் பட்டது
துணிச்சலி னாலே தூக்கப் பட்டது
தியாகத் தாலே உயர்த்தப் பட்டது
ரத்த நீரால் அணைக்கப் பட்டது
அந்த
லட்சிய தீபத்தில் ஏற்றிய சுடர் நீ!

## நீதித்தாயின் நெற்றிக்கண்
## நெல்சன் மண்டேலா

காலைக் குயிலின் பாடற் பொருளே
நெல்சன் மண்டேலா - என்
காலப் புரட்சியின் மூலப் படையே
நெல்சன் மண்டேலா
நீலக் கடலின் ஓலத் திரையே
நெல்சன் மண்டேலா - நம்
நீதித் தாயின் நெற்றிக் கண்ணே
நெல்சன் மண்டேலா!

தென்றல் காற்றுக் குள்ளே இருக்கும்
தீயே மண்டேலா - ஒரு
தீர்ப்புக் காகக் காத்துக் கிடக்கும்
அறமே மண்டேலா.
கன்றுக் காகப் பாலைச் சொரியும்
தாயே மண்டேலா - ஒரு
கருப்புக் குரலுக்குக் காகக் கிடைத்த
வாயே மண்டேலா!

இருட்டுச் சிறையைத் தாயின் கருப்பை
என்றே கொண்டானோ - அதில்
இரண்டாம் தடவை கருவாய்க் கிடந்து
வெளியே வந்தானோ!
மருட்டித் திரியும் ஆதிக் கப்பேய்
மரணம் குறித்தானோ - ஒரு
மானுட வேள்வியின் ஆகுதி என்றே
தன்னை நினைத்தானோ!

கருப்பு நெருப்பில் வெள்ளை இருட்டு
கருகிச் சாகிறது - அட
காட்டுத் தீயில் பார்த்தினி யச்செடி
சாம்பல் ஆகிறது.
தெருப்புழு திக்குள் கருப்புத் தோழன்
கிடந்தது சிலகாலம் - அவன்
திருவோ லக்கச் சிறப்பைப் பார்க்கத்
துடிக்குது எதிர்காலம்!

## மக்கள் தலைவர் மூப்பனார்

கால்முளைத்த கண்ணியத்தின்
வடிவமெங்கள் மூப்பனார்
கவிதைபோல இனிமையான
மனிதரெங்கள் மூப்பனார்
பால்மனத்துக் குழந்தைபோலப்
பாசம்கொண்ட மூப்பனார்
பாரதிக்குப் பேரர் போற்றிப்
பாடுகின்ற மூப்பனார்.

காவிரிக்கு மைந்தராகிக்
கடமையாற்றும் மூப்பனார்.
கங்கையென்னும் மங்கைதன்னைக்
காதலிக்கும் மூப்பனார்
பூவிரிக்கும் புன்னகைக்குப்
பொருள்விளக்கும் மூப்பனார்
புதியபா ரதத்துவீரர்
போற்றுகின்ற மூப்பனார்.

தேசியத்தின் புதல்வரான
தீரரெங்கள் மூப்பனார்
தியாகராஜர் மரபுகாக்கச்
சபைநடத்தும் மூப்பனார்
வீசுகின்ற தென்றல்போல
மென்மையான மூப்பனார்

வெள்ளை வேட்டி கட்டுகின்ற
வெளிச்சம் எங்கள் மூப்பனார்

ஒளி நடக்கும் படிநடக்க
உறுதி கொண்ட மூப்பனார்
உடை படைத்த வெண்மைபோல
உளம் படைத்த மூப்பனார்
விழி நடக்கும் திசைகள்எட்டும்
படை நடத்தும் மூப்பனார்
விதி படைத்த தடையுடைக்கும்
மதி படைத்த மூப்பனார்.

மடையுடைத்த அன்புவெள்ளப்
படைபடைத்த மூப்பனார்
மழைபடைத்த மேகம்கொண்ட
நிறம்படைத்த மூப்பனார்
இடிஇடித்த போதும்கண்கள்
இமைத்திடாத மூப்பனார்
இறுதிவெற்றி உறுதியென்ற
திடம்படைத்த மூப்பனார்

கலைவளர்க்கும் செம்மல்என்று
புகழ்வளர்க்கும் மூப்பனார்
கவிவளர்க்கும் சுவைகளுக்குச்
செவிவளர்க்கும் மூப்பனார்
தலைவருக்குள் தலைவரான
தலைவரெங்கள் மூப்பனார்
தமிழருக்குள் தமிழரான
காமராஜர் மூப்பனார்.

## கலைஞர் கருணாநிதி

மீண்டும்மீண்டும் இன்பதுன்பம்
மேவிவந்த போதும்வென்று
மீண்டுவரும் என்னினத்தின் காவலர் - இந்த
மேதைபுகழ் சொல்பவரே பாவலர்!

என்றும் வாழும் எங்கள் தமிழ்
கொண்டபெயர் காப்பதற்குத்
தண்டவாளம் மீதில்வைத்த ஓர்தலை - எங்கள்
தாயகத்துக் கேஅதுதான் உயிர்நிலை!

தென்புலத்தைத் தின்னவரும்
தீயமகள் இந்தியவள்
தன்பலத்தை வெல்லவந்த தளபதி - அந்தத்
தங்கமகன் கொண்டபெயர் அருள்நிதி!

'கனகனையும் விசயனையும்
கல்சுமக்க வைத்தஎங்கள்
இனியபுகழ் இந்தியையும் சுமக்குமா - அந்த
ஈனநிலை என்தமிழே உனக்குமா?'

என்றுகேட்டு நின்றுதங்கள்
இன்னுயிரைத் தந்தவீரக்
கன்றுகளின் நெஞ்சில்நின்ற தீரர்யார்? - வீர
காவியத்தின் நாயகராம் வீரர்யார்?

ஈழமென்ற காவியத்தை
இன்னுயிரால் தீட்டுகின்ற
தோழருக்குக் காவலாகி வந்ததார் - ஊர்
தோறும்சென்று வீரஉரை தந்ததார்!

வஞ்சகமும் சூதுகளும்
வாய்திறந்து நிற்கையிலும்
நெஞ்சகத்தில் கனல்வளர்த்து நின்றதார்? - சில
நீசர்களின் மோசடியை வென்றதார்?

இந்தியாவில் மட்டுமல்ல
இங்கிலாந்து தேசம்முதல்
எந்தநாட்டுத் தமிழருக்கும் தலைவர் யார்? - அவர்
இதயம்போற்றும் சங்கத்தமிழ்ப் புலவர்யார்?

**தோல்விகோடி வந்துவந்து**
**துன்புறுத்தி னாலும்தியாக**
**வேள்வியென்று கொண்டவெற்றி வேந்தனே - நீ**
**விதியைவெற்றி கொள்ளவந்த மாந்தனே!**

**காலகால மாகஎம்மைக்**
**காப்பதற்கு வேண்டுமென்று**
**சீலமாகச் செய்த தவம் வென்றது - வந்து**
**செந்தமிழே உன்வடிவில் நின்றது!**

**வெட்டவெளிப் பொட்டலிலே**
**வீழ்ந்துவிட்ட என்னினத்தைத்**
**தொட்டெழுப்ப வந்திருக்கும் தென்றலே - எங்கள்**
**தோழர்கோயில் உன்றன்வீட்டு முன்றிலே!**

## புரட்சித்தலைவி ஜெயலலிதா புகழ்பாடு தைமகளே!

மஞ்சள் முகம்காட்டி, மனைப்பொங்கல் மணங்காட்டி
கொஞ்சும் வயல்மேனிக் கோலமிகு எழில்காட்டி
செஞ்சொல் தமிழ்காட்டி, சின்னஇடை நடம்காட்டி
வஞ்சியென வந்தவளே, வரவேற்றோம் தைமகளே!

அண்ணலார் காந்தி, அரும்பெரியார், பேரறிஞர்
மன்னவராம் எம்.ஜி.ஆர், மாக்கவிஞர் பாரதியார்
தன்னுரிமைப் பாவேந்தர் தம்கனவை நனவாக்கும்
பெண்ணரசி தன்புகழைப் பேசவந்தாய் தைமகளே!

வேளாண் குடிகளுக்கு இலவசமாய் மின்சாரம்
தாளாண்மைத் தொழிலாளர் தலைதூக்கத் தனித்தொண்டு
நூலாளும் நெசவாளர் துயர்தீர்க்கப் பேருதவி
மேலான தமிழாட்சி மேன்மையிது தமிழ்மகளே!

ஆலைக் கரும்பாய் அல்லலுற்றுத் தவிக்கின்ற
ஏழைக்குச் சேலை, எளியோர்க்கு வேட்டி, ஒரு
வேளைக்குச் சத்துணவு விரைவாய்க் கிடைக்குதடி
தாழைக்கு வாசம் தரவந்த தைமகளே!

சாராயம் தேங்கும் சதுப்புநில மாயிருந்து
தீராத துயர்க்கிருமி தினம்தந்த தமிழ்நாட்டில்
ஓராணை யாலே 'மது'அரக்கன் தனையொழித்த
தீராதி தீரமதைத் தினம்பாடு தைமகளே!

'தண்ணீரைத் தா!' என்றால் தங்கியுள்ள தமிழர்களின்
செந்நீரை ஓடவிட்டுச் சிரிக்கும்கரு நாடகத்தார்
வெந்நீரைத் தேசியத்தின் வேருக்கு வார்த்தாலும்
கண்ணீரை அடக்கிக் கட்டுண்டோம் தைமகளே!

தாய்கொண்ட பொறுமையைத் தன்னடக்கப் பண்பாட்டைப்
பேய்கொண்ட சிறுமதியார் பின்னும் மதியாரேல்
வாய்கொண்டு வரலாறு வாழ்த்துகின்ற தமிழ்வீரம்
பாய்கின்ற நாள்விரைவில் பார்ப்பாய் நீ தைமகளே!

மண்மகளின் பொறுமைக்கும் மலர்மகளின் திருவுக்கும்
நன்மகளாம் கலைமகளின் நல்லறிவுத் திறனுக்கும்
பெண்மகளாய் வந்துதித்த பெருமாட்டி யாய்விளங்கும்
பொன்மகளின் ஆட்சிக்குப் புகழ்பாடு தைமகளே!

## இலங்கை அமைச்சர் தொண்டமான்.

வாயிழந்த பூச்சிகளாய் வாழுகின்ற மக்களுக்கு
வாழ்வளிக்க வந்தஎங்கள் தொண்டமான் - அந்த
வள்ளல்புகழ் பாடவந்தேன் இங்குநான்!

தேயிலைக்கு ரத்தம்தந்து செம்மைநிறம் தந்தமக்கள்
தேவைகளை நன்குணர்ந்த தொண்டமான் - அந்தத்
தேவன்புகழ் பாடவந்தேன் இங்குநான்!

காடுவெட்டி மண்திருத்திக் கழநிகண்ட தங்கமக்கள்
கஷ்டம்தீர்க்க வந்தஎங்கள் தொண்டமான் - அந்தக்
காவியத்தைப் பாடவந்தேன் இங்குநான்!

ஏதுமற்ற மக்கள் பெற்ற மக்களுக்குக் கல்விதந்து
இமயமாக உயரவைக்கும் தொண்டமான் - அந்த
ஏந்தல்தன்னைப் பாடவந்தேன் இங்குநான்!

சாதிபேதம் இன்றிமக்கள் ஓதுதற்குப் பள்ளிக் கூடம்
சகலதிக்கும் நாட்டிவைத்த தொண்டமான் - அந்தச்
சத்தியத்தைப் பாட வந்தேன் இங்குநான்!

வாக்கிழந்த மக்களுக்கு வாழ்வுரிமை அற்றவர்க்கு
வாக்குரிமை பெற்றளித்த தொண்டமான் - அந்த
வள்ளல்புகழ் பாடவந்தேன் இங்குநான்!

ஊக்கமுள்ள மலையகத்தை உறுதியுள்ள மலையகத்தை
ஆக்குதற்குத் தொண்டுசெய்யும் தொண்டமான் - அந்த
அண்ணல்புகழ் பாடுபவர் புத்திமான்!

## அறவாணர் ஆர்.எம்.வீ.

*அடிமனத்தைத் துருவுகின்ற பார்வை! நம்மை*
*அளவெடுக்கப் பளபளக்கும் இரண்டு கண்கள்!*
*கடிவதனைத் தயங்காமல் கடிந்து, பின்னர்*
*கருணைசெய்யத் தயங்காத அன்பு நெஞ்சம்*
*முடிவெதற்கும் உடன்கூறிச் சிக்கல் தீர்க்கும்*
*மூளை வளம்! எடுத்த குரல்! கருத்த மேனி!*
*விடிவதற்கு முன்தோன்றும் அமைதி! இந்த*
*வெளிச்சத்தில் வீரப்பர் திருவைக் காண்க!*

**முப்பாலில் முதற்பால் ஆனார்.**

*'சந்திர' சபையிற் காணும்*
*தாரகை கோடி! அங்கே,*
*மந்திரத் தலைவர் இந்த*
*மாபெரும் துருவ மீனே!*
*செந்தமிழ் வாணர்க் கெல்லாம்*
*சிறந்ததோர் துணைவர்! எங்கள்*
*சிந்தையில் அறத்துப் பால்போல்*
*செந்நெறி காட்டும் தீபம்!*

**அடக்கத்தின் திரு உருவம்**

*எளிமையில் துலங்கு கின்ற*
*இணையிலாக் கம்பீ ரத்தை*
*இளமையி லிருந்தே காட்டும்*
*இயல்பினார்! அமைச்சர் என்னும்*

வளமையில் கூட அந்த
வழக்கத்தை மாற்ற வில்லை
நிலைமையில் இமயம் ஒப்பார்
நிச்சயம் இவரே யாவார்!

**நாடறிந்த நக்கீரர்**

எதிரிலே வந்து நிற்பான்
இறைவனே ஆன போதும்
"மதியிலே குற்றம் உண்டு
மாற்றுக" என்று சொல்லும்
புதுவித மனிதர்! எந்தப்
புகழ்ச்சிக்கும் மயங்கி டாத
புதிரிவர்! பெரியார் போலப்
போலியை எதிர்க்கும் வீரர்!

**அரிய மதிவாணர்! புதிய கலைவாணர்!**

சித்திரக் கலையா! பாடும்
செந்தமிழ்க் கவியா! காணும்
வித்தக நடிப்பா! அந்த
விண்தொடும் இசையா! இன்னும்
எத்தகு கலையா னாலும்
இயல்பினை ஆய்ந்து பார்த்துப்
புத்திளங் கருத்தைச் சொல்லும்
புதுமையை இவர்பாற் கண்டோம்!

**தானே தனது சிற்பி.**

சோர்விலா நெஞ்சும் எந்தச்
    சுகத்தையும் தேடாத் தொண்டும்
சேர்வதால் உயர்ந்த செம்மல்
    சிறப்பெல்லாம், அதிர்ஷ்டப் பெண்ணின்
பார்வையால் வந்த தல்ல,
    பற்பல ஆண்டாய்ச் சிந்தும்
வேர்வையால் வந்த தாகும்
    விழுப்புகழ் பெற்ற தாகும்!

**வீரப்பர் வாழ்க!**

**வேரப்பர் அறத்துக் கானார்!**
    **விதையப்பர் பண்புக் கானார்!**
**ஓரப்பர் தமிழர்க் கானார்!**
    **உதையப்பர் பகைவர்க் கானார்!**
**சீரப்பர் தொண்டுக் கானார்!**
    **செல்லப்பர் முதல்வர்க் கானார்**
**வீரப்பர் புது யுகத்தின்**
    **விதையப்பர் ஆனார்!வாழ்க!**

# பேராசிரியர் அன்பழகன்

நீலநிற வானத்தில் நிதம் நடக்கும்
நிறைந்தசுடர் ஞாயிறுபோல் தோற்றம்! எந்த
வேளையிலும் தமிழ்நலமே எண்ணு கின்ற
வேட்கைமிகும் தமிழ்நெஞ்சம்! நிமிர்ந்த பார்வை!
தோளிரண்டும் கையிரண்டும் தமிழர் வாழ்வின்
தொண்டுக்கே பிறந்தவைகள் என்னும் நோக்கம்!
சோலையிலே பூத்திருக்கும் பூக்களைப்போல்
சூழ்ச்சி யெதும் அறியாத புன்சிரிப்பு!

நக்கீரர் அன்றிருந்தார் என்னும் சேதி
நம்புதற்குக் காரணமாய் இன்று வாழும்
சொற்கீரர் யாரென்று கேட்டால் அந்தச்
சுந்தரரே அன்பழகர் ஆவார்! எங்கள்
தற்கால வரலாற்றை எழுது கின்ற
தமிழ்க்கலைஞர் உடன்பிறப்பே! நாங்க ளிட்ட
சொற்கோலம் உங்கள்புகழ் சொல்லு தற்குச்
சொற்றமிழில் ஒருமுயற்சி யாகும் ஐயா!

குற்றால அருவியெனக் கொட்டு கின்ற
கொள்கைமணம் கமழுகின்ற உங்கள் பேச்சால்
சற்றேனும் சளிபிடிக்கக் கண்டோ மில்லை!
தன்மான மின்சாரம் ஏறக் கண்டோம்!

கற்றாழை வழவழப்பு சிலபேர் வார்த்தை!
கத்திமுனைப் பளபளப்பு உங்கள் சொற்கள்!
வற்றாத தமிழ்நதியே! தமிழர் கண்ட
வரலாற்றின் வரலாறே! வாழ்க நீடு!

கல்வியிலா ஊருக்கு நெருப்பு வைத்துக்
கற்பூர ஆரத்தி எடுப்போம் என்று
சொல்லியவன் தமிழ்க்கவிஞன்! அவன்கண் டுள்ள
சுடர்க்கனவை மொழிபெயர்க்கும் கார ணத்தால்
எல்லோரும் தமிழகத்தில் உங்க ளைத்தான்
'எங்கள் பேராசிரியர்' என்கின் றார்கள்
புள்ளிவிழாப் பெருவாழ்வு உங்கள் வாழ்வு!
பொற்கால நல்லமைச்சே வாழ்க நீடு!

பண்ணாளும் குரல் வளத்தால் கருத்தால் எங்கள்
பைந்தமிழை ஆண்டதனால் எம்மை யாண்ட
அண்ணாவின் உலைக்களத்தின் அரிய வார்ப்பே!
அச்சமற்ற தமிழ்க்குலத்தின் புலவர் ஏறே!
தென்னாட்டின் ரத்தினமே! தமிழர் நெஞ்சத்
திருநாட்டின் கதிரவனே! தியாக வாழ்வே!
எந்நாளும் இலக்கியம்போல் நீங்கள் வாழ
எம்தமிழை இறைஞ்சுகிறோம் வாழ்க நீடு!

## இலங்கை அமைச்சர் தேவராஜ்

பொன்னிலே வடித்த பண்பு
பூவிலே வடித்த மென்மை
பண்ணிலே வடித்த இன்சொல்
பாலிலே வடித்த நெஞ்சம்!

தாயிலே எடுத்த பாசம்
தமிழிலே எடுத்த வாசம்
தீயிலே எடுத்த தூய்மை
தேவராஜ் அவர்க ளாகும்!

நிலத்திலே விளைந்த திங்கள்
நிலவிலே விளைந்த கண்கள்
நலத்திலே விளைந்த முத்து
நன்மையில் விளைந்த சொத்து!

அறத்திலே கிடைத்த தேகம்
அருளிலே கிடைத்த போகம்
வரத்திலே கிடைத்த வாழ்வு
வள்ளல்பேர் தேவராஜாம்!

பொதிகையில் பிறந்த தென்று
புகழ்கொண்ட திரண்டு கண்டீர்
மதுமலர்த் தென்றல் ஒன்று
மாத்தமிழ் மற்றும் ஒன்று!

சேக்கிழார் அமைச்சர் ஆனார்
செந்தமிழ் அமைச்சர் ஆச்சு
தேவராஜ் அமைச்சர் ஆனார்
தென்றலே அமைச்சர் ஆச்சு!

உருக்கொண்ட தென்றல் காற்றே
உலப்பனை வெளிச்சக் கீற்றே
படிக்கின்ற கம்பன் பாட்டே
பக்திக்குப் பரிசுச் சீட்டே!

பொறிக்கின்ற வெற்றிச் செல்வி
பொன்மகள் விஜய லக்ஷ்மி
தரிக்கின்ற திலகம் நீயே
தமிழைப்போல் வாழ்க தாயே!

## சாதனை நாயகர்
## சைதை சா. துரைசாமி

தொண்டன்தான் தலைவன் என்னும்
தூயதோர் தத்து வத்தின்
சின்னம்தான் சைதை சா.து!
சிறப்பெலாம் சேர்ந்த தொண்டர்!

சைதைக்குச் சிறந்த தொண்டர்!
சைதைக்கே பிறந்த தொண்டர்!
சைதையார் என்னும் பேரில்
சரித்திரம் படைக்கும் தொண்டர்!

பதவியில் சிறந்த போதும்
பதவியைத் துறந்த போதும்
இதயத்தைத் தொகுதிக் காக
இலவச மாகத் தந்தார்!

அன்புடைச் சைதை மக்கள்
அற்புதச் சைதை யார்க்கு
என்றைக்கோ தங்கள் நெஞ்சில்
இடஒதுக் கீடு தந்தார்!

செயலையே கவிதை என்றால்
செயல்வீரர் சைதை யாரை
இயல்பிலே கவிஞர் என்றே
இசைக்கலாம் என்று சொல்வேன்.

இயற்கையின் நெறியில் வாழும்
இவரைநாம் கவிதை என்று
தயக்கமே இன்றிச் சொல்வோம்
தமிழ்போல் நம் 'சைதை' வாழ்க!

## தனித்தமிழ்த் தந்தை
## மறைமலையடிகள்

மறைந்து விடுவதா
மரணம் ?
உன்னை
மறந்து விடுவதே
மரணம் !

மூச்சு விடுவதா
வாழ்வு ?
உன்னை
மூச்சாய்க் கொள்வதே
வாழ்வு !

## தமிழ்த் தென்றல் திரு.வி.க.

ஊரிலே திருவிருக்கும்
உன்னைப்போல் யாருக்குப்
பேரிலே திருவிருக்கும்!

கதரைப்போல் வெளுத்தவன் நீ!
காந்தியம் தன்னைப்போல்
எளிமையிலே கம்பீரம்
இயல்பாகக் கொண்டவன் நீ

நாடும் மொழியும்
துருவங்கள் அல்ல!
நாணயம் ஒன்றின்
இருபுறங்கள் என்பதனைக்
காட்டுதற்கு வந்திருந்த
கலியாண சுந்தரம் நீ!

நீ
இல்லையென்றால் இன்றைக்குத்
'தேசியம் வளர்த்த தமிழ்'
என்னும் தொடருக்கு
ஒற்றை உதாரணமும்
உயிரோடு இருக்காது!

தங்கத்தமிழ் வளர்த்த
தமிழ்முனிவா நீ வாழ்க!

# பாரதியார்

*நெருப்புக்குத் தீவைக்கும் கண்கள்! பார்ப்பார்*
*நெஞ்சுக்குள் சுழல்காந்தச் சக்க ரங்கள்!*
*கருப்பாக, படுத்திருக்கும் கேள்வி போன்ற*
*கனமான இருமீசை! மெலிந்த மார்பு!*
*சிரிப்பொளியைச் சிந்திவரும் இதழ்கள்! என்றும்*
*சிந்தனையைக் கிளறிவிடும் சொற்கள்! தாயின்*
*கருப்பத்தில் தோன்றிவிட்ட மேதைத் தன்மை!*
*கவியரசர் பாரதியின் தோற்ற மாகும்!*

*பாவுலகை ஆளவந்த வேந்தன் - இவன்*
*பார்முழுதுக் கும்உரிய மாந்தன் - திகழ்*
*மூவுலகைப் பாடலுக்கு முற்றும்விலை பேசுகின்ற*
*வேந்தன்! - சக்தி*
*காந்தன்!*

*தேன்வழிந்து கொண்டிருக்கும் பாட்டில் - அவன்*
*சீர்பெருகிக் கொண்டிருக்கும் நாட்டில் - இங்கு*
*நானறிந்த பாரதியின் நல்லுருவம் என்னிதய*
*வீட்டில்! - மனக்*
*கூட்டில்!*

செந்தமிழைச் செங்குருதி ஆக்கி - சுடர்
செங்கதிரைக் கண்களிலே தேக்கி - இங்கு
வந்தமகன் வாழ்ந்ததெல்லாம் வாழ்க்கைதனைக்
காவியமாய் ஆக்கி! - நமை
ஊக்கி!

கண்ணிரண்டும் தீப்பறக்கும் வேல்கள்! - பொய்
கண்டுவிட்டா லோநெருப்புக் கோள்கள்! - எங்கள்
காவியத்து நாயகனைக் கண்டவுடன் ஆடும்எமன்
தோள்கள்! - ஓடும்
கால்கள்!

மேகமதைக் குத்துமவன் மீசை! - அந்த
மீசைமகன் தேடவில்லை காசை! - இந்தத்
தேகமெனும் ஆலயத்தில் தேவிபரா சக்திதொழ
ஆசை! - தொண்டு
பூசை!

கச்சணிந்த மாதருக்கும் அஞ்சான் - அவன்
கச்சணியா மாதருக்கும் அஞ்சான்! - உயிர்
துச்ச மெனத் தான்மதித்துத் துன்பமதைத் தூள்படுத்த
அஞ்சான்! - வைர
நெஞ்சான்!

அச்சமதைக் கொன்றுவிடப் பார்ப்பான்! - இவன்
ஆணவத்தைக் கொன்றுவிட்ட பார்ப்பான் - மண்ணில்
இச்சகத்தில் பிச்சைபெறும் ஈனர்களைக் கண்டுமனம்
வேர்ப்பான்! - பின்பு
ஆர்ப்பான்!

பெண்ணடிமை தீர்க்கவந்த தீரன்! - எங்கள்
பேதைமையைப் போக்கவந்த தீரன்! - சாதிப்
பேயிருந்து ஆட்டிவந்த பேருலகைக் காக்கவந்த
சூரன்! - புரட்சிக்
காரன்!

பட்டிதொட்டி எங்குமிவன் பேச்சு! - இவன்
பாடலெலாம் உண்மையொளி வீச்சு! - எங்கள்
கட்டழகன் வாழ்க்கையிலே கண்டதெலாம் என்னவெறும்
ஏச்சு! - எதிர்
நீச்சு!

சாதியிலே இல்லையவன் நாட்டம்! - இந்தச்
சக்திமகன் காண்பதவள் ஆட்டம்! - இந்த
மேதினியில் காக்கைகளும் மேவுபுகழ்ப் பாரதியின்
கூட்டம்! - உயிர்த்
தோட்டம்!

வானகத்தை வையமுடன் இணைப்பான்! - தேவ
வாழ்க்கையுடன் மானுடத்தைப் பிணைப்பான்! - அந்த
மோனமகள் வெண்ணிலவை முத்தமிடப் பாட்டினிலே
அழைப்பான்! - அமுதைக்
குழைப்பான்!

வெண்ணிலவின் நல்லமுதைக் குடிப்பான்! - அந்த
விண்முகட்டில் ஓட்டைவிழ இடிப்பான்! - எழிற்
கண்ணனவன் தன்னையிவன் காதலியாய்க் கண்டுமனம்
துடிப்பான்! - பா
வடிப்பான்!

காற்றுவெளிப் பந்தலிலே நடப்பான்! - வானக்
காட்டினிலே மின்மினியைப் பிடிப்பான்! - கால
ஆற்றிலெதிர் நீந்துகின்ற ஆசைக ளிலேகவிதை
வடிப்பான்! - தேன்
குடிப்பான்!

பாரிருக்கும் நாள்வரைக்கும் இருப்பான்! - இவன்
பைந்தமிழின் பாடல்களில் இருப்பான்! - வானக்
காரிருக்கும் நாள்வரைக்கும் கற்பனையின் அற்புதத்தில்
சிரிப்பான்! - புகழ்
விரிப்பான்!

# நாவலர் சோமசுந்தர பாரதியார்

காவலர் தோற்றம் பெற்றார்
கண்ணிய வடிவம் பெற்றார்
ஏவலர் பலரைக் கொண்ட
இணையிலாச் செல்வம் பெற்றார்
பாவலர் நெஞ்சம் பெற்றார்
பலதுறை அறிவைப் பெற்றார்
நாவலர் பட்டம் பெற்றார்
நற்புகழ் பரிசாய்ப் பெற்றார்.

ஓங்கிய தோள்கள் பெற்றார்
உரமுள்ள கைகள் பெற்றார்
வீங்கிய மார்பு பெற்றார்
வித்தக நாவைப் பெற்றார்
பாங்கிலே உயர்ந்த பண்டைப்
பாண்டியர் மீசை பெற்றார்
ஏங்கிய தமிழன் ஓங்கி
எழுந்திடும் பார்வை பெற்றார்

ஆங்கிலப் புலமை பெற்றார்
அதிலுமோர் தலைமை பெற்றார்
தீங்கில்லா வடமொ ழிக்குள்
திளைக்கின்ற பழக்கம் பெற்றார்!

தூங்கிடா உணர்வைப் பெற்றார்
துடிக்கின்ற வீரம் பெற்றார்
பூங்கொடி முல்லை தோற்கும்
புன்னகை இதழில் பெற்றார்

வெண்மையை நெஞ்சில் பெற்றார்
வேகத்தைச் செயலில் பெற்றார்
உண்மையை ஆய்வில் பெற்றார்
உயர்வினைப் பிறப்பில் பெற்றார்
தண்மையில் நிலவைப் போன்ற
தமிழ் மகள் லலிதா என்னும்
பெண்மையை என்று பெற்றார்
பெரும்புகழ் அன்று பெற்றார்

மயலொடு தமிழைக் கற்கும்
மாபெரும் விருப்பில் எந்தப்
பயலொடு படித்தார் என்றால்
பயலொடு அன்று! ஒற்றைப்
புயலொடு படித்தார், அந்தப்
புயலின்பேர் சுப்ர மண்யன்!
இயலொடு பிறந்த இந்த
இருவர்பா ரதிகள் ஆனார்!

வந்திக்கப் பாரதத் தாய்
வாழ்வுக்குத் தமிழ்த்தாய் என்று
சிந்திக்க இயற்கை அன்னை
செய்தனள் இவரை! ஆனால்

இந்திக்கு வால் பிடிக்கும்
இடுகாட்டுத் தேசி யத்தைச்
சந்திக்கு வரவ ழைக்கும்
சரித்திரம் இவர்ப டைத்தார்!

இந்தியா தன்னை எல்லை
விரிந்ததோர் தமிழ் நாடாகச்
சிந்தியார் என்றும் இங்கே
தேசிய வாதி ஆகார்!
செந்தமிழ் முதன்மை போற்றித்
தேசிய வாழ்வு வாழ்ந்த
பைந்தமிழ் அறிஞர் சோ.சு
பாரதி வாழ்க! வாழ்க!

கல்லெலாம் கவிதை பாடக்
கழையெலாம் கீதம் பாட
புல்லெலாம் பேச்சைக் கேட்டுப்
பூரிப்பில் தமிழைப் பூக்க
சொல்லெலாம் சுளைக ளாகும்
சொற்றமிழ்ப் பார திக்கு
இல்லெல்லாம் படம் திறப்போம்!
இதழெலாம் புகழு ரைப்போம்!

## யுகக்கவிஞன் பாவேந்தன்

காற்றுக்குக் கவிபாட
ஆசை வந்தால்
    கனககசுப்பு ரத்தினத்தின்
    வாசல் வந்தே
ஏற்றுக்கொள் மாணவனாய்
என்று கெஞ்சும்!
    இளந்தென்றல் தனைப்பரிசாய்க்
    கொடுக்கும்! பொங்கு

ஊற்றுக்குத் தமிழ் பேச
ஆசை வந்தால்
    உச்சரிக்கும் பாவேந்தன்
    பேரை! திராட்சைச்
சாற்றுக்குள் சுவையோடும்
இவன்தே கத்தில்
    சந்ததமும் தமிழோடும்
    குருதி யாக!

உள்ளத்தில் அணு சக்தி
உலையைக் கொண்ட
யுகப்புரட்சிக் கவிஞனவன்
கவிதை, கால
வெள்ளத்தைக் குடித்துத் தன்
வேட்கை தீரும்!
விரல் பட்டால் மின்சார
விருந்து வைக்கும்!

அள்ளத்தான் குறைந்திடுமா
ஆழி வெள்ளம்?
ஆண்டுகளால் அவன் வயதை
அளக்க லாமா?
உள்ளத்தால், உதடுகளால்
அளக்க ஒண்ணா
ஊழித்தீ அளக்கப்புல்
அளவு கோலா?

## தமிழ்த்தாத்தா உ.வே.சா

காலம் நமக்களித்த
கனகமணிப் பெட்டகமாய்
ஞாலம் வியக்கவந்த
நல்லறிவே உ.வே.சா!
மூளும் தமிழுணர்வை
மூட்ட வந்த தத்துவமாய்
வாழும் வரலாற்றின்
வரலாறே உ.வே.சா.!

பனையோலைப் படுக்கையிலே
படுத்திருந்த தமிழ்க்குமரி
கனவோலை ஒன்றினிலே
கடவுளுக்குத் தூதுவிட்டாள்
தனியோலை அது கண்ட
தமிழ்க்கடவுள் சிவபெருமான்
கனிவோடு அனுப்பிவைத்த
காவலர்பேர் உ.வே.சா!

ஈராயிரமாண்டு
இலக்கியத்துப் பொக்கிஷத்தைத்
தாராளமாய்க் கரையான்
தன்னுணவு என்றிருக்கப்
பாராது வாழ்ந்திருந்த
பதர்களுக்கு மத்தியிலே
வாராது வந்திருந்த
மாமணியே உ.வே.சா.!

உள்ளாடும் தமிழ்மகள்பேர்
ஒலிக்கின்ற இடமெல்லாம்
பல்லாடும் காலத்தும்
பயணித்த தமிழ்ப்பயணி
தள்ளாடும் வயதினிலும்
தமிழாடக் கிளம்பியவர்
எல்லோரும் தொழும்பெரியார்
இவர்பெயரே உ.வே.சா.!

வீட்டுப் பரண் மேலே
விளக்கறியா இருட்டினிலே
கூட்டுக் கிளியாகக்
குந்திக் கிடந்தவளை
நாட்டுத் தெருவினிலே
நடமாட வைக்கவந்த
பாட்டுக்கிழவர் அந்தப்
பகலவன் பேர் உ.வே.சா.

வெந்ததனைத் தின்றுவிட்டு
விதிவந்தால் செத்து விட்ட
மந்தகதி மக்களெலாம்
மண்ணோடு மண்ணாக
செந்தமிழைச் சிந்தித்துச்
செம்மாந்து வாழ்ந்திருந்த
பைந்தமிழன் யாமறிந்த
பாட்டன்பேர் உ.வே.சா.!

ஆச்சி தமிழ்மங்கை
அழகொழுகும் மேனியினைப்
பூச்சி அரித்திருந்தும்
பொறுத்திருந்தார் மத்தியிலே
மூச்சி ழந்த குழந்தைக்கு
முதலுதவி செய்பவர் போல்
வாய்த்த மருத்துவராய்
வந்தவரே உ.வே.சா.!

# வேங்கடசாமி நாட்டார்

*புலிநாட்டார் பரம்பரையில் வந்து, வீரப்*
*புயல்நாட்டார் திருக்குலத்தில் கண்தி றந்து,*
*கலைநாட்டார் தஞ்சைநடுக் காவி ரிக்குக்*
*கனத்தபுகழ் பிறப்பாலே சேர்த்துத் தந்து,*
*மலைநாட்டார் வேங்கடத்தார் பேரைத் தாங்கி*
*மாத்தமிழின் திருத்தொண்டில் அன்றி ஒன்றில்*
*விழிநாட்டார் மனம்நாட்டார் என்று வாழ்ந்து*
*விண்ணாட்டார் தொழவாழும் நாட்டார் வாழ்க!*

*சித்திரையில் இரண்டாம்நாள் பிறந்தார்! கல்விச்*
*சிறப்படைய நித்திரையைத் துறந்தார்! பண்பில்*
*முத்திரைப்பொன் எனப்போற்றத் திகழ்ந்தார்! எங்கள்*
*முத்தமிழை அறிவாலே அளந்தார்! அன்று*
*புத்தகத்தில் சிறைப்பட்ட தமிழை எங்கள்*
*புத்தகத்தில் நடமாடக் கொணர்ந்தார்! அந்த*
*வித்தகரை நினைப்பவரே உயர்ந்தார்! மற்ற*
*வீணர்களோ சாவதற்கே பிறந்தார்! கண்டீர்!*

# மக்கள்கவிஞர்
# பட்டுக்கோட்டையார்

சின்ன சின்ன இழை பின்னிப் பின்னி வரும்
சித்திரக் கைத்தறிச் சேலைகள் போல்
எண்ணத் தறிகளில் வண்ணக் கவிதைகள்
ஏழைக்கு நெய்தவன் பட்டுக் கோட்டை!

தந்தத்தில் கட்டிய மாளிகை உச்சியில்
தங்கி யிருந்தவன் பாட வில்லை
இந்தத் தரைமகள் சொந்தப் புதல்வனாய்
என்றைக்கும் வாழ்ந்தவன் மக்கள்கவி!

காலைக் கருக்கலில் வேலைக்குச் செல்பவர்
காலுக்குக் கீழ் அவன் தன்னைவைத்தான்
ஓலைக் குடிசையில் ஒண்டிக் கிடப்பவன்
உச்சிக்குக் கிரீடமாய் விண்ணை வைத்தான்!

இன்றைக் கிருப்பவர் நாளைக் கிருப்பவர்
என்றைக்கும் வாழ்பவ ராவ தில்லை
அன்றைக்கு வாழ்ந்தவன் இன்றைக்கு வாழ்பவன்
என்றைக்கும் வாழ்பவன் மக்கள் கவி.

## கவியரசு கண்ணதாசன்

தத்துவச் சிந்தனைகள் தாமாகப் பூக்கின்ற
தமிழ்ச்சோலை நீஎன்பதா?
தாராள நெஞ்சிலே ஏராளமாய் வரும்
தனிமுத்துன் மொழியென்பதா?
அற்புதக் கற்பனைச் சித்திரம் என்னவான்
அமுதிலே உருவானதா?
அருவிதரும் விரைவிலே உருகவரும் வார்த்தையின்
அழகுநடம் நதிதந்ததா?
புத்தகக் காடுகள் ஆயிரம் இருந்தென்ன
பூஞ்சோலை உனதாகுமா?
பூபாள ராகங்கள் நீபாடக் கேட்கின்ற
புதுமைக்கு நிகராகுமா?
தத்திடும் தாமரைச் சித்திரம் கண்ணனின்
தாசனென வந்ததமிழே!
தலைதாழ்த்தி வணங்காத முடிகொண்ட தேவனுன்
சன்னதியில் கைகூப்புவேன்!

## எழுத்து வேந்தர் நாரணதுரைக்கண்ணன்

எழுத்து வேந்தர் நாரண துரைக்
கண்ணர் வாழ்கவே! - எங்கள்
இதய மெல்லாம் ஆளும் அறிவு
மன்னர் வாழ்கவே!

பழுத்த ஞானப் பழத்தைப் போன்ற
செம்மல் வாழ்கவே! - நல்ல
பண்பில் சங்கப் புலவர் போன்ற
அண்ணல் வாழ்கவே!

கதைகள் தீட்டிக் கனத்த புகழ்
நிறைய ஈட்டினார்! - தீங்
கவிதை தீட்டிக் கற்பனையின்
வளத்தைக் காட்டினார்!

விதைகள் போன்ற கருத்தி ருக்கும்
உரைகள் தீட்டினார்! - காற்று
வெளியில் எல்லாம் தமிழ்ம ணக்கும்
கொடியை நாட்டினார்!

ஆண் வடிவில் அவ்வை யாரைக்
கண்டது போலே! - அந்த
அகத்தியரே நேரில் வந்து
நின்றது போலே

மேன்மை மிக்க நாரண துரைக்
கண்ணர் தோன்றினார் இந்த
மேதினியோர் நெஞ்சினிலே
தமிழை ஊன்றினார்!

வளைந்தி ருக்கும் முதுகு! கொள்கை
வளைந்ததே இல்லை! - வெறும்
வாழ்க்கைக்காக வசதி தேடி
அலைந்ததே இல்லை!

தளர்ந்திருக்கும் உடம்பு! தொண்டு
தளர்ந்ததே இல்லை! - இதழ்
தவழ்ந்திருக்கும் புன்சிரிப்பு
தணிந்ததே இல்லை!

எழுத்து வேந்தர் நாரண துரைக்
கண்ணர் வாழ்கவே! - எங்கள்
இதயமெல்லாம் ஆளும் அறிவு
மன்னர் வாழ்கவே!

## எழுத்துச்சிற்பி வாசவன்

குறள்ஒன்று கருவாகிக் குறைவின்றித் திருவாகி
வருகின்ற உருவொன்று கண்டோம்! - அதன்
வரவாலே தமிழமுதம் உண்டோம்!

படையோடு வருகின்ற பட்டாளத் துரைபோல
நடைபோடும் தென்பாண்டிச் சிங்கம்! - இவர்
நடமாடும் எழுத்தாளர் சங்கம்!

தான்பெற்ற பொருள்முற்றும்
தமிழ்த்தொண்டர் தமக்கென்னும்
வான்பெற்ற உள்ளத்து வள்ளல்! - இவர்
வரக்கண்ட தமிழ்நெஞ்சில் துள்ளல்!

காலத்தின் மூலத்தைக் காண்கின்ற கண்கொண்டு
ஞாலத்தை அளக்கின்ற ஞானி! - இவர்
நண்பர்க்குக் கரையேற்றும் தோணி!

வளத்துக்கு வித்தாகி வற்றாத சொத்தான
எழுத்துக்கள் ஒவ்வொன்றும் சிற்பம்! - அவை
எந்நாளும் இவர்நெஞ்சில் கார்ப்பம்!

உளந்தோறும் சுடர்வீசும் ஒளித்துண்டு போல்வார்த்தை
இளந்தேவ சபைகண்ட நேர்த்தி! - இவர்
எழுத்துக்குப் பரிசாகும் கீர்த்தி!

தமிழ்வா சவன்பெற்ற தனிவாசம் புகழ்ப்பூவில்
கமழ்வாசம் ஆகுமடி தோழி! - இந்தக்
கற்பூரச் சொல்லழகர் வாழி!

முகவைக்கு முகம்தந்த மூவாத தமிழ்த்தொண்டின்
அகவைக்கு ஒரெல்லை இல்லை! - அது
அழகான தமிழ்வாச முல்லை!

என்றைக்கும் வாழ்கின்ற என்காலத் தமிழ்த்தொண்டர்
குன்றத்து விளக்காக வாழி! - இவர்
குலம்வாழ்க பலநூறு ஊழி!

## கலைமாமணி விக்கிரமன்

காம்பிலே தேனைப் பூவில்
காண்பது சம்ப வந்தான்!
வேம்பிலே செந்த மிழ்த்தேன்
விளைவதோர் வரலா றாகும்!
காம்பிலே உள்ள தேனோ
வண்டுக்கும் காணா(து)! இந்த
வேம்பிலே உள்ள தேனால்
உலகுக்கே விருந்து கண்டீர்!

திருச்சியில் பிறந்த தென்றல்
ஸ்பென்சரில் நுழைந்து பார்த்து,
பரிச்சயம் எழுது கோலால்
பைந்தமிழ் நாட்டில் பெற்று
உரைத்தமிழ் வளத்தால் மக்கள்
உள்ளத்தில் ஓங்கி, எங்கள்
திருச்சபை வாழ்த்த இன்று
திருப்புகழ் பெற்ற தம்மா!

மானைத்தா என்று கேட்டாள்
மைதிலி மங்கை! பூவே
தேனைத்தா என்று கேட்கும்
தினசரி வண்டு! சொல்லில்
வானைத்தா என்று கேட்கும்
வாசகர் கூட்டம்! வாழ்வின்

ஞானத்தால் அதனை இந்த
நாயகர் வழங்க லானார்!

மென்மைக்கு மென்மை தன்னை
மென்மையாய்க் கற்றுத் தந்த
வன்மைக்குப் பேரே வேம்பு!
வழுக்கிடும் வெல்வெட்டைப் போல்
கண்ணுக்குத் தெரிந்த போதும்
கருத்திலே எஃகைப் போன்றோர்!
உண்மைக்குத் தவிர வேறு
ஒன்றுக்கும் அஞ்சி டாதார்!

வில்லிலே விட்ட அம்பின்
விழியெலாம் இலக்கின் மேலே
செல்லுமே அதுபோல் தானும்
செயலிலே சிந்தை வைப்பார்!
தில்லியில் தமிழ்மா நாடு
திருப்பணித் தலைவர் யாரோ
சொல்லியா தெரிய வேண்டும்
சூரர்விக் ரமனே ஆவார்!

அந்தநாள் மன்னர் வாழ்க்கை
ஆடவர் வீரப் போர்கள்
சந்தனப் பெண்கள் காதல்
சதைநிலா உலாக்கள் எல்லாம்
செந்தமிழ் நடையில் தந்தார்
சிந்தையைக் கவர்ந்து நின்றார்
இந்தநாள் வரலா றானார்
இலக்கியம் வரலா றாச்சு!

மூவடி கேட்டுப் பின்னர்
முதலடி மண்ணில் வைத்தோன்
சேவடி சிறிய தாகச்
செந்தமிழ் அடியை வைத்தார்
நாவடி ஊறும் அந்த
நற்மிழ்ச் சுவைக்கே அன்பர்
காவடி எடுத்து வந்தார்
காண்கிற்பார் காண்மின் அம்மா!

வள்ளுவன் பாடல் போலே
வடிவமோர் குறளே யாக
உள்ளம்வெண் முல்லை யாக
உணர்வெலாம் அமுத மாக
சொல்லிலே யாகம் செய்யும்
சொற்றமிழ்ச் செல்வர் தொண்டை
கல்லிலே வடிக்க வில்லை!
கவிதையில் வடிக்க வந்தோம்!

தன்னுளே தமிழை வைத்துத்
தாங்கும்விக் ரமனார் வாழ்க!
இன்னுயிர்த் துணைவி வாழ்க!
இவர்குலம் தழைத்து வாழ்க!
கண்ணெதிர் தெய்வம் காட்டும்
கவிஞனாம் இளைய தேவன்
பண்ணிலே உள்ள சக்தி
பாரெலாம் காக்க மாதோ!

## கம்பன் கவிநயச் செல்வர் நல்ல பெருமாள்

வள்ளத்தோல் வரிமணக்கும் வாயும், சோழ
வளநாடன் கவிதைக்கு நெஞ்சும், அந்த
வெள்ளைத்தோல் இளம்பறவை கீட்சின் கள்ளின்
வெறிமணக்கும் கவிதைக்குக் காதும் கொண்ட
நல்லபெரு மாளைப்போல் என்தே சத்தில்
நானறிந்த ஒப்பாய்வு மேதை இல்லை!
இல்லைஎன்றால் இல்லைதான், நினைத்துப் பார்த்தே
இரண்டாம்ஆள் தனைக்காட்ட இயல வில்லை!

அவர் வாசல் அறிஞருக்குப் பள்ளிக் கூடம்!
அறிவியலும் இலக்கியமும் ஆடும் பாடும்!
அவர் பேச்சில் அனைத்துலக இலக்கியங்கள்
அணிவகுக்கும், ஒன்றையொன்று தழுவிக் கொள்ளும்!
அவரேஓர் கலைக்கழகம் ஆவார்! அந்த
'அவர்' நல்ல பெருமாளாம்; அவரைப் பற்றி
இவர்பாடல் அவர்பாடல் தேவை யில்லை!
இளந்தேவன் திருப்பாடல் கேட்க வாரீர்!

## டாக்டர் அவ்வை நடராசன்

அவ்வைக்குப் பட்டம் தந்தார்
அறிவுக்குப் பட்டம் தந்தார்!
அவ்வைக்குப் பதவி தந்தார்
அறிவுக்குப் பதவி தந்தார்!
அவ்வைக்குத் தம்மைத் தந்தார்
அறிவுக்குத் தம்மைத் தந்தார்!
அவ்வைக்குக் கவிதை தந்தேன்
அறிவுக்குக் கவிதை தந்தேன்!

ஆயிரம் அறிஞர் பெற்ற
அறிவெலாம் ஒன்று சேர்த்தால்
பாயிரம் ஆகும் அவ்வை
படைத்தபே ரறிவின் முன்னால்!
கோயிலின் சிற்பம் என்று
குறிக்கலாம் பிறரை என்றால்
கோயிலே ஆக அன்றோ
அவ்வையைக் குறிக்க வேண்டும்!

தந்தை போல் பிள்ளை என்ற
தனிப்பெரும் வரலாற் றுக்குச்
சொந்தமாய் இவரை யல்லால்
சொல்லத்தான் ஒருவர் உண்டோ!
முந்தையர் உரைவேந் தென்றால்
முழுப்புகழ் குறையா வண்ணம்
மைந்தரும் உரைவேந் தானார்
மாநிலப் புதுமை யானார்!

மேதைகள் வரலா றெல்லாம்
மிகக்கற்ற மேதை; அவ்வை
மேதைகள் தமக்கு மேதை
மேன்மையில் தம்மை ஒப்பார்!
பாதைகள் எல்லாம் அவ்வை
பாடங்கள் நடத்தும் கூடம்!
கீதைகள் சாலை யோரம்!
கேட்பவர் இளைஞ ராவார்!

எங்கிவர் நிற்பார் அங்கே
இளைஞர்கள் நிற்பார்! அந்த
நங்கையர் கவர்ச்சி அவ்வை
நற்றமிழ் வீச்சுக் குண்டு!
பொங்கிடும் இளமை அவ்வை
போகின்ற திசையி லன்றோ
கங்கையிற் புனித மாய
கவிஞர்கள் நதியும் போகும்!

மயிலையின் சந்தில், சென்னை
மாம்பலத் தெருவில் இன்னும்
கயிலையின் குகையில் நல்ல
கடைஒன்று காண்பீ ராயின்
மயலுடன் சுவைக்கும் அவ்வை
மலர்ப்பதம் பதித்த அந்தச்
செயலையும் அங்கே காண்பீர்!
சிறந்ததோர் சுவைஞர் அவ்வை!

வெற்றுச்சொல் உண்டா? எல்லாம்
விருந்துச்சொல் கண்டீர்! அவ்வை
வெற்றிச்சொல் அன்றி என்றும்
வேற்றுச்சொல் அறியா வீரர்!
ஒற்றைச்சொல் தமிழ ளக்கும்!
ஒற்றைச்சொல் கருத்த ளக்கும்!
ஒற்றைச்சொல் சுவைய ளக்கும்!
ஒற்றைச்சொல் அவைய ளக்கும்!

தாரகை யில்லம் கண்ட
தாரகை அவ்வை, வீட்டுத்
தாரகை துணையால் வாழ்வில்
தனிப்பெரும் புகழைப் பெற்றார்!
ஏகத் திறைவன் போலும்
இளையஞா னியரைப் பெற்றார்!
பாரகத் தமிழர் நெஞ்சில்
பாங்குற இடமும் பெற்றார்!

பிறைநட ராசர் தில்லைப்
பெருநட ராசர்! வண்ண
உரைநட ராசர் இந்த
உரைநடை ராசர்! ஞானத்
துரைநட ராசர் வாழ்க!
தொண்டினால், இயற்கை வாழும்
வரைநட ராசர் வாழ்க!
வாழ்த்தினேன் இளைய தேவன்!

# வார்த்தைச்சித்தர் வலம்புரிஜான்

*அலை பழுத்த முடியாளன்!*
*அருள் பழுத்த விழியாளன்!*
*கலை பழுத்த நாவாணன்!*
*கவி பழுத்த பாவாணன்!*
*தலை பழுத்த இளஞானி!*
*தமிழ் பழுத்த புதுயோகி!*
*மலை பழுத்த கதிர் போலே*
*மனம் பழுத்த மகராசன்!*

**வெள்ளாடைக் கலைவாணி**
**வேட்டியிலே வருவதுபோல்**
**நல்லாரின் சபைகளிலே**
**நாவாடும் வலம்புரிஜான்**
**தள்ளாடும் வயதினரும்**
**தமிழாட வரும்அருவி!**
**மல்லாட வருவோரின்**
**மனங்களுக்கு மதயானை!**

உவரிதந்த வலம்புரிஜான்
உலகறிந்த தமிழ்ச்சித்தன்!
சுவடுகளைப் பதிக்கின்ற
சுகநடையில் இளங்கம்பன்!
தவறுகள்முன் நக்கீரன்!
தளிர்களின்முன் ராமலிங்கன்!
சபரிதந்த சிறுகனிக்குத்
தனைவழங்கும் ஸ்ரீராமன்!

நான்கண்ட தமிழ்ரூசோ!
நாட்டுக்குப் புதுவால்டேர்!
ஊன்கொண்டு மறுபடியும்
உலவுகின்ற இங்கர்ஸால்!
வான்கொண்டு வரும்தாந்தே!
வரம்கொண்டு வரும்ஜான்சன்!
கோன்கண்ட தமிழகத்துக்
குடிகண்ட ஒருபிளேட்டோ!

மால்த்யூசின் மறுபதிப்பு!
மன்றில்வரும் புதுலாஸ்கி!
வாழ்த்தவரும் தமிழ்ரஸ்கின்!
வரலாற்றில் மறுபுஷ்கின்!
வீழ்த்தவரும் அரக்கரிடம்
விளையாடும் ஸ்ரீகிருஷ்ணன்!
பாழ்த்தமனப் பகைவர்களைப்
பரத்துவதில் கரிகாலன்!

ராஜரிஷி தனைப்படைக்கும்
ராஜரிஷி வலம்புரிஜான்
பேசுபுகழ் அண்ணாவின்
பின்வந்த பேரறிஞன்!
தேசமதில் நடக்கின்ற
சேதிஇவர் செப்புகையில்
வாசமுள்ள வார்த்தைக்கு
வளைகாப்பு நடக்கிறது!

முழங்கட்டும் துந்துபிகள்
மூளட்டும் ஞானத்தீ!
குலுங்கட்டும் அண்டமெலாம்!
குதிக்கட்டும் கோள்களெலாம்!
விளங்கட்டும் இவர்குடும்பம்!
விரியட்டும் இவர்புகழே!
வழங்கட்டும் வலம்புரிஜான்!
வாழ்த்தட்டும் என்தேசம்!

## பாரதி சுராஜ்

நேர்மை வடிவமே! நெருப்பு மனிதனே!
கூர்த்த மதியே! கொள்கைத் தமிழனே!
ஈரத் தமிழ் நீ! எட்டய புரத்து
வீரத் தமிழ் நீ ! வெற்றித் தமிழ் நீ!
காவிய மாகக் கடிதம் வரையும்
ஓவியத் தமிழும் உனக்குரி யதுதான்!
உன் - விருப்பும் வெறுப்பும் விசித்திர மானவை!
வெளிப்படும் சொற்களோ பவித்திரமானவை!
முட்டிக் கொள்ளாத முரண்பா டுகள்நீ!
மூக்கைப் பொடியால் அழுக்காக்கிய நீ
நாக்கை வாய்மையால் தூய்மைசெய் திருக்கிறாய்!
கறைபட நேர்ந்தது கால காலமாய்
ஆடைதான்! உன்றன் ஆசைகள் அல்ல!
சாயா திருப்பது திருமண் மட்டுமா
சான்றாண் மையும்தான் சத்திய ராஜனே!
தேவனும் உன்னைத் தலைவன் என்பதால்
தேசங்க ளுக்கெல்லாம் நீதான் தலைவன்!

நீ வாழ்க!

## கவிமாமணி நா. சீ. வரதராசன்

தேங்கு நற்சுவை ஓங்கி டப்புனை
தீங்குயிற் கவிப்பாணர் - இவர்
ஆங்கிலக் கலைவாணர் - மறை
நான்கி சைத்திடத் தூங்கு மப்பர
நாயகற் பணிசீலர் - தமிழ்
நேயருக் கொருதோழர்!

தூண்டி டும்வெறி மூண்டி டும்படி
ஆண்டிடும் தமிழ்த்தூக்கு! - தென்
பாண்டியன் நிகர்நோக்கு! - ஒளி
பூண்டி டும்புகழ் தான்வ ரும்படி
நீண்டிடுமிவர் நாக்கு! - அதில்
தேன்துளிக் கிறவாக்கு!

ஆடி டும்விழி ஆடி டும்இதழ்
ஆடிடும் தலைபாட்டால் - நான்
பாடிட இவர்கேட்டால்! - களி
கூடி டும்படி ஆடுவர்மது
தேடிடும் தமிழ்நாட்டார் - இவர்
பாட்டிலோர் துளிபோட்டால்!

**திறனாய்வுத்தென்றல்**
**மது. ச. விமலானந்தம்**

வெளிச்சத்தைச் சிந்து கின்ற
விழிகளின் சொந்தக் காரர்
ஒளிச்சத்தைச் சொல்லுக் கூட்டும்
ஒப்பற்ற வாய்மைக் காரர்
மொழிச்சொத்தை வழங்கு கின்ற
முதல்தர ஈகைக் காரர்
துளிச்சத்தும் இல்லா ருக்கும்
தொண்டுசெய் நெஞ்சுக் காரர்!

தலையிலே மதுவை வைத்தார்
தமிழிலே வாழ்வை வைத்தார்
கலையிலே கருத்தை வைத்தார்
கண்ணிலே கருணை வைத்தார்
அலையிலே காணு கின்ற
ஆர்வத்தை நெஞ்சில் வைத்தார்
இலையிடை வைத்த காய்போல்
எங்கேயும் தன்னை வைத்தார்.

நாலுபத் தாண்டுத் தொண்டில்
நற்றமிழ் வளர்ச்சி கண்டார்
வாலிபத் தமிழர்க் குள்ளே
வருங்காலத் தேசம் கண்டார்
தோழமை கொண்டார் நெஞ்சில்
தொண்டினால் தம்மைக் கண்டார்
நாளுமோர் உயர்வு காணும்
நாயகர் விமலா னந்தம்!

புஞ்சைக்குத் தண்ணீர் போலும்
பூமிக்குக் கதிரைப் போலும்
தஞ்சைக்குப் பொன்னி போலும்
தமிழர்க்குக் கிடைத்த மேதை!
செஞ்சொற்கள் தம்மை ஆயும்
திறனாய்வுத் தென்றல் தன்னை
இன்சொற்கள் கொண்ட தேவன்
இளந்தேவன் வாழ்த்து கின்றேன்!

## திருவாவடுதுறை ராசரத்தினம் பிள்ளை

நாதசுரத்தில் நாதசுகத்தை
நாட்டுக் களிக்கும் ஞானி - நீ
நாதாந் தத்தின் தத்துவ மாக
நடக்கும் ஆண்கலை வாணி!

அழகிய தோற்றம் இளகிய நெஞ்சம்
உலவிய தென்றல் காற்று - நீ
அலைஅலை யாகத் தருகிற இசையில்
ஆடுது மானுட நாற்று!

குரலில் வழிகிற குற்றா லத்தை
விரலில் தருகிற கலைஞன் - தினம்
கும்மி யடிக்கும் பைரவி நவரோஸ்
கூத்தில் மகிழ்கிற சுவைஞன்!

தேஷ், ஹிந் தோளம், ஸோஹினி, காபி,
பாகே ஸ்ரீ, ஆ போகி - தேன்
சிந்திடும் ராக மாலிகை ஆக்கித்
தருகிற நீ இசை யோகி!

காஞ்சிப் பட்டில் சரிகைப் பாடுகள்
காண்பதில் உண்டோ புதுமை? - வெறும்
காற்றுக் குள்ளே வேலைப் பாடுகள்
காட்டுவ தன்றோ திறமை!

ஆடியி லேவரும் காவிரி வெள்ளம்
　　ஆடிப் பார்த்தால் இன்பம் - உன்
தோடியி லேவரும் இன்ப சுகத்தில்
　　தோன்றுது கங்கை வெள்ளம்!

நாடி நரம்பில் ஓடிய தோடி
　　நஞ்சையில் பாய்ந்தால் செந்நெல் - உன்
நாதஸ்வ ரத்தின் மூச்சுப் பட்டால்
　　நாணலும் ஆகும் கன்னல்!

பூமியை நோக்கிய புல்லாங் குழலே
　　ஐயா உன்னிசைக் கருவி - உன்
பூபா ளத்தில் உறைந்து கல்லாய்ப்
　　போனது எத்தனை அருவி!

வாசஸ் பதியை நீ வா சித்தால்
　　வைகுந் தங்கள் திறக்கும் - உன்
வாய்வழி குழலில் வழியும் வராளியில்
　　வண்ணக் கனவுகள் பிறக்கும்!

காம்போ திக்கும் கல்யா ணிக்கும்
　　காதற் போதைகள் ஏறும் - உன்
கரகரப் ப்ரியா கேட்டால் பாலோ
　　காளையின் மடியில் ஊறும்!

மாடியில் சாதகம் நீசெய் தாலும்
மனிதர்கள் கூட்டம் தெருவில் - அட
மன்மத ராசா எப்படி இப்படி
மந்திரம் கற்றாய் கருவில்!

திமிறிக் கொண்டு திமிரியில் வந்தது
தேவர்கள் போற்றும் ராகம் - எட்டுத்
திசையிலும் உன்போல் தரிசித் தோமா
தென்திசைக் கேநீ யோகம்!

தர்பா ருக்குள் நாயகி வந்தால்
தவறா காதா என்பார் - அட
நாயகி இல்லாத் தர்பா ரா அது
நல்லது தானே என்பாய்!

சமஸ்தா னங்கள் முன்னா லும் நீ
சமஸ்தா னத்தைப் பெற்றாய் - ஒரு
சக்கர வர்த்தி என்கிற மேன்மையைச்
சங்கீ தத்தால் உற்றாய்!

சாகும் போதும் சாதகம் செய்தாய்
சாகா துள்ளதுன் கீர்த்தி - உன்
சாம்பலும் பாடும் சங்கீ தத்தில்
சஞ்சா ரிக்குது நேர்த்தி!

மனத்தின் செவியில் நீவா சிக்கும்
    மந்திரப் பாடல் இன்று! - அட
மகரா ஜாநீ மறுபடி வந்து
    வாசிக் கும்நாள் என்று?

சட்டையை மாட்டக் கைகளைத் தூக்கச்
    சாய்ந்தது தேகம் கீழே! - அட
சங்கீ தத்தின் ஆன்மா அங்கே
    சடுதியில் எழுந்தது மேலே!

ஒன்பது துவார நாதஸ் வரத்தை
    ஊதிப் பார்க்குது காலம்! - அதை
ஒருநாள் காற்று ஒதுக்கிய தென்றால்
    உடனே கேட்குது ஓலம்!

எந்தப் பாணன் ஊதுகி றானோ
    என்னுள் எழுந்தது ராகம்! - அந்த
ஏழிசை வாணன் ஊதும் வரைக்கும்
    இசைபா டட்டும் தேகம்!

ஆச்சா மரத்தில் ஆக்கிய குழலை
    மூச்சாய்க் கொண்டான் ஒருவன்! - ஓர்
ஆயிரம் சாதனை அதிலே செய்தான்
    ஆகையி னாலவன் இறைவன்!

## நடிகர் திலகம் சிவாஜி

ஜெகம், 'நடிக்கும் கலைக்கரசர்'
எனப்போற்றும் செம்மலிவர்
முகம் நடிக்கும், தனியாக
மூக்கு மட்டும் தான் நடிக்கும்!
முகம், மூக்கு நடிப்பதுடன்
முடிந்திடுமா ? பத்துவிரல்
நகம் நடிக்கும்! இது போல
நடிப்பதற்கு யார் பிறந்தார்!

விழிநடிக்கும் அந்நடிப்பை
விளக்குதற்கோ வார்த்தையில்லை!
மொழிநடிக்கும், மொழிபேசா
விட்டாலும் இதழ் நடிக்கும்!
துளிநடிக்கும் விழியோரம்
சோகத்தில்! இவருடைய
வழிநடிக்கும் நாயகிக்கோ
வளையல்களும் மிகநடிக்கும்!

கால் நடிக்கும், கைநடிக்கும்
என்பதெல்லாம் பழஞ்செய்தி
நூல் நடிக்கும் ஆடையிலே!
நூலிடையார் இவரருகே
சேல் நடிக்கும், விழியுடனே
முதலிரவில் கொண்டுவந்த
பால் நடிக்கும்! இதைத்தானோ
'பாலுணர்வு' என்கின்றார்!

சிரிப்புக்கும் கம்பீரம்
அம்மட்டோ! இவர்காலின்
செருப்புக்கும் கம்பீரம்!
செருமலிலும் கர்ஜனைதான்!
மருப்புக்கு மார்பேந்தும்
மறக்குலத்து நாயகனின்
பொறுப்புக்குள் கலைத்தாயின்
புகழாட்சி நடக்கிறது!

தந்தைவழி தேசியமும்
தாய்வழியே செந்தமிழும்
சொந்தவழி யாய்க்கொண்ட
சுடர்முகத்து வேந்தனிவன்
முந்தைவழி ஆயிரங்கள்
இருந்தாலும் விருதுநகர்
தந்தவழி யல்லாது
தனக்குவழி தேடாதான்!

தமிழ்த்தாயின் தவப்புதல்வா!
தமிழ்க்கலையின் உயிர்த்துடிப்பே!
அமைத்தாய் நீ கலையரசை!
ஆளுகிறாய் நெஞ்சமெலாம்!
உமைத்தாயின் அருளாலே
உயர்தமிழ்போல் நீவாழ
இமைக்காத தேவர்குல
இளந்தேவன் வாழ்த்துகிறேன்!

## டாக்டர் கிருஷ்ணா ஸ்ரீநிவாஸ்

ஒளிவாழ்த்துப் பாடும்உன்றன் பிறந்த நாளில்
ஒருநூறு தேசங்கள் வாழ்த்துப் பாடும்!
களியாடும் ஆங்கிலத்துச் சொற்கள் கூடி
கைகொட்டிக் களியாடும்! உன்பேர் பாடும்!
விழி வாழ்த்துப் பாடல்களைப் பாடும்! நெஞ்சில்
விளையாடும் தமிழ்பாடும்! எங்கும் உள்ள
மொழி பாடும்! உன்மூச்சே கவிதை என்று
முற்றத்தில் குயில்வந்து நித்தம் பாடும்!

காவிரியாள் கைமாலை சூட்டு கின்ற
கடல்வண்ணன் துயில்கின்ற ஸ்ரீரங் கத்தில்
பூவிரியாச் செடிகொடிகள் வளர்ந்த தில்லை!
புகழ்விரியா மாந்தர்களும் பிறந்த தில்லை!
மூவடியால் உலகளந்த முதல்வன் எங்கள்
மூன்றுதமிழ் பாடுகின்ற அரங்கத் தம்மான்
சேவடியைச் சிந்தையிலே தாங்கு கின்ற
செழுங்குலத்தில் நீபிறந்தாய்! செம்மல் ஆனாய்!

காவியத்துப் பாவாணன் மில்டன் கண்ட
கம்பீரம்! செம்புலமை! எதையும் வண்ண
ஓவியத்தில் தீட்டுதல்போல் தீட்டும் ஸ்பென்ஸர்
ஒப்பற்ற பேராற்றல்! என்றும் என்றன்
நாவியக்க நூன்வியக்கும் எனது ஷெல்லி
நல்மூச்சில் மூச்சுவிடும் உரிமை வேட்கை!
பாவலர்க்கும் சிந்தனையை வழங்கும் பிரௌனிங்
பட்டறிவு இவற்றையுன்றன் பாட்டில் கண்டேன்!

நெருப்பினிலே சாறெடுத்து நெஞ்சம் என்னும்
நீண்டதொரு வார்ப்பினிலே ஊற்றி, ஊழிச்
சிரிப்பினிலே ஓசையினை எடுத்து வந்து
சிந்தனையைக் கவிதையெனச் செய்கின் றாய்நீ!
வரிப்புலிபோல் நீஎழுந்து விட்டால் எந்த
வாமனனும் எடுப்பானே விஸ்வ ரூபம்!
பிறப்பினிலே நீமேதை! எங்கள் பேரப்
பிள்ளைகளின் நூற்றாண்டு பேசும் உன்னை!

நெய்யருகே மொய்க்கின்ற எறும்பைப் போல
நீள்புவியின் அறிஞரெல்லாம் 'கிருஷ்ணா' என்று
மெய்யுருக அழைக்கையிலே சொந்த நாட்டார்
மெய்வாய்கண் மூக்குசெவி இழந்து விட்டார்!
கையருகே முத்துக்கள் குவிந்தி ருக்க
கடலருகே சிப்பியினைத் தேடு வார்போல்
நொய்யரிசித் தமிழரெலாம் ஆங்கி லத்தின்
நூதனங்கள் பிறரிடத்தில் தேடு வார்கள்!

வானமுதம் வாயருகே வழிதல் போலும்
வரலாறு வாசலுக்கு வருதல் போலும்
ஞானமெலாம் ஒருருவாய்த் திரண்டு வந்து
நம்வீட்டுக் கதவுகளைத் தட்டல் போலும்
தேனருவி புழைக்கடையில் விழுதல் போலும்
தேனிலவு கூரையிலே தொங்கல் போலும்
ஞானமகன் எனப்பிறந்து யார்வந் தாலும்
நம்மவர்கள் வழக்கம்போல் அறிவ தில்லை!

ஆண்டுகளா நடந்தவைகள்! எழுபத் தைந்து
அதிசயங்கள் நடந்தவைகள்! கவிதைக் கேஓர்
தூண்டு விரல் வேண்டுமென நினைத்த தேவன்
சுட்டுவிர லால் உன்னைச் சுட்டிக் காட்டி
"ஆண்டுகளோர் ஆயிரமும் உலகில் வாழ்ந்தென்
அவைப்புலவன் ஆக" வென அனுப்பி வைத்தான்!
நீண்டபுகழ்ப் பெரியவர்கள் இன்று கூடி
நின்பிறந்த நாட்சிறப்பை ஓது கின்றார்!

தெய்வீகக் காவிரியின் பால்கு டித்துத்
தேம்ஸ்நதியின் குரலினிலே பாடும் உன்னைத்
தைமாதச் சூரியன்கள் பாட வேண்டும்!
தங்கநிலா ஆரத்தி எடுக்க வேண்டும்!
ஐ.நா.வில் தமிழ்ஆளக் கவிதை பாடும்
ஆர்வமுள்ள இளந்தேவன் வாழ்த்து கின்றேன்!
ஐயாநான் அகவையிலே இளைய வன்தான்?
ஆனாலும் நான்கவிஞன்! வயதெ தற்கு?

வானவரில் நானொருவ னாயி ருந்தேன்
வல்லரக்கர் நடுவினிலும் வாழ்ந்து வந்தேன்
மானுடரில் நானொருவன் ஆகி விட்டேன்
மாண்டதுபோல் மாண்டதுண்டு! மடிந்த தில்லை!
போனவர்கள் போனார்கள்! என்னை எந்தப்
புதைகுழியும் விழுங்குதற்குத் திறந்த தில்லை!
ஆனதொரு வயதுக்கோ அளவே இல்லை
ஆகையினால் உன்னைநான் வாழ்த்து கின்றேன்!

## கோபாலகிருஷ்ணன்
இந்தியன் வங்கி

முந்தைநாள் அறிஞர் எல்லாம்
முத்தமிழ் வங்கி யாவார்!
தந்தையும் தாயும் அன்பின்
தனிப்பெரும் வங்கி ஆவார்!
இந்தியன் வங்கி மக்கள்
இதயத்து வங்கி! அங்கே
செந்தமிழ் வங்கி ஒன்று
சிறப்புடன் இருப்ப துண்டு!

கொடுத்திட நீளும் கையின்
கோபால கிருஷ்ணன் ஆடை
உடுத்திய வங்கி யாக
உலவுதல் உண்டு! அந்தச்
சரித்திர வங்கி இன்று
தன்னல மற்ற தொண்டால்
சரித்திரம் படைத்தல் கண்டு
தமிழ்மகள் மகிழு கின்றாள்!

வாங்கத்தான் வங்கி என்ற
வழக்கினை மாற்றி, நாட்டைத்
தாங்கத்தான் வங்கி என்ற
தனிப்புகழ் படைத்த தொண்டர்!
ஏங்கத்தான் ஏழை என்ற
இழிநிலை மாற்றி வாழ்வில்
ஓங்கத் தான் என்னும் நல்ல
உறுதியைத் தந்த செம்மல்!

மேயரின் மைந்த ராகி
மெல்லிய இயல்பி னாலே
நேயரின் வாழ்த்தைப் பெற்ற
நிறைகுடம் குணத்தின் குன்று!
தாயினும் சிறந்த அன்பைத்
தமிழ்த்தொண்டர் தமக்குக் காட்டும்
தூயகோ பால கிருஷ்ணன்
வாழ்வாங்கு வாழ்க! வாழ்க!!

## புகழாளர் உமாபதி

இளைத்த புகழ் சிலருக்குக் கிடைக்கும்! கெஞ்சி
ஏங்கு புகழ் சிலருக்குக் கிடைக்கும்! மூத்துக்
களைத்த புகழ் சிலருக்குக் கிடைக்கும்! கொஞ்சம்
கருத்த புகழ் சிலருக்குக் கிடைக்கும்! தப்பிப்
பிழைத்த புகழ் சிலருக்குக் கிடைக்கும்! தேடிப்
பிடித்த புகழ் சிலருக்குக் கிடைக்கும்! வாழ்வில்
தழைத்த புகழ் யாருக்குக் கிடைக்கும்! ஓங்கும்
தனித்த புகழ் யாருக்குக் கிடைக்கும்! அந்தத்

தழைத்த புகழ், தனித்த புகழ், இன்பம் பொங்கித்
ததும்பு புகழ் ஒன்றுண்டே! அதன்பேர் கேட்டால்
உழைத்த புகழ் எனச்சொலலாம்! இல்லை யென்றால்
உமாபதியார் என்றுமதைச் சொலலாம்! எங்கோ
முளைத்த புகழ் அதுவன்று! உழைப்பே மூச்சாய்
முறையாகப் பெற்றபுகழ் ஆகும்! அந்தப்
பழுத்த புகழ் தனக்கென்றும் பிறந்த நாளாம்
பாடுபுகழ் பெற்றவரை வாழ்த்து கின்றேன்!

திரை வெற்றி பெறச் சென்றார் உண்டு, மேனி
திரை வெற்றி பெற்றது தான் கண்ட துண்டு!
உரை வெற்றி பெறச் சென்றார் உண்டு! ஆனால்
ஒரு வெற்றியும் இன்றி மீண்ட துண்டு!
அரை வெற்றி கால் வெற்றி பெற்றி டாமல்
யார் பெற்றார் முழு வெற்றி? அதையும் கூட
நரை வெற்றி கண்டிடுமுன் யாரே பெற்றார்?
நாமறிந்த உமாபதியார் தானே பெற்றார்!

ஒரு மடங்கு வெற்றிபெறல் உலகப் பாங்கு
உமாபதியார் இவ்விதிக்கும் விதிவி லக்கு!
இரு மடங்கு வெற்றிபெறாத் துறையே இல்லை
இல்லறமே சொல்லாதா இனிய சாட்சி!
ஒரு மடங்கு வெற்றிபெற்றார் எல்லா ருக்கும்
ஒரு மடங்கு வாழ்நாட்கள் என்றால் வாழ்வில்
இரு மடங்கு வெற்றிபெற்ற இவருக் கிங்கே
இரு மடங்கு வாழ்நாட்கள் உறுதி தானே!

இச்சகத்தில் பலர்பெற்ற வெற்றி இங்கே
இச்சகத்தில் பெற்றெடுத்த வெற்றி! ஆனால்
அச்சகத்தில் இவர்பெற்ற வெற்றிக் கிங்கே
அச்சகத்தும் ஈடுஇணை இல்லை! எல்லாம்
அச்சமகத் தில்லாத தன்மை தந்த
அரும்பரிசு! துணிவுமட்டும் அகத்தி ருந்தால்
எச்சகத்தும் வெற்றிபெறக் கூடும் என்ற
இலக்கணத்தின் இலக்கணமே வாழ்க நீடு!

"வா கண்ணா, நலம் தானா, என்ன ராஜா"!
வழியினிலே இப்படிவா சகத்தைக் கேட்டால்
தாகமுள்ள வேங்கைகளும் கூட அந்தத்
தன்மையினால் அக்கணமே சைவ மாகும்!
நாகமெல்லாம் பல்லுக்குக் கீழே பையில்
நல்லமுதம் ஊறுவதால் காந்தி யத்தைத்
தேகமெலாம் தான்செலுத்தப் போவ தாகச்
செப்பியதை விளக்குதற்குப் படமெ டுக்கும்!

இருவாழ்வு வாழாமல், செயலும் சொல்லும்
எதிரிகளாய் ஆகாமல், இன்பம் பொங்கும்
பெருவாழ்வு வாழ்கின்ற அன்பே! உன்றன்
பெருமாட்டி இருவருடன் குடும்பத் தோடு
திருவாழ்வில் திளைக்கின்ற திருவா ளன்நீ!
திசையளந்த புகழ்படைத்து வாழ்க! இன்னும்
வரும்வாழ்வும் பெருவாழ்வாய் வாழ இந்த
வளமார்ந்த **இளந்தேவன்** வாழ்த்துகின்றேன்.

## வானதி திருநாவுக்கரசு

பொன் மணக்கும் வீதி, புகழ் மணக்கும் திருநகரம்
பண்மணக்கும் தேவ கோட்டையிலோர் பழங்குடியில்
ஜெயக் கொடி நாட்டிய சேக்கப்பர் பரம்பரையில்
வியத்தகு தமிழ்த் தொண்டு விழிதிறந்த நாளிதுகாண்!

பனையேட்டில் ஏறிப் பவனிவந்த செந்தமிழை
அச்சுவாகனம் ஏற்ற அவதரித்த திருக்குழந்தை
கண்திறந்த நாளிதுகாண்! கலைசிறந்த நாளிதுகாண்!

சிந்தனைப் பெண்களை ஏராளமாய்ப் பெற்று
எந்தநாள் சுவைஞருக்கு இவர்மாலை யிடுவதென்று
நொந்த தமிழறிஞர் நோன்பு பலித்ததெல்லாம்
இந்த நாளன்றோ என்னினிய தமிழ்க்குலமே!
வானவரும் தமிழ் நூல்கள் வாங்க வருவதிந்த
தீன தயாளு தெருவிலன்றோ திருநாடே!

மூவாயிரம் ஏக்கர் முழு நிலத்தில் பர்மாவில்
ஆடித் திரிந்த மகன் அருந்தொண்டால் அன்றோ, வெண்
தாளெல்லாம் இன்று தமிழரசி ஆடுகிறாள்!
நெற்றித் திருநீறு நெறிமறவாப் பெருநெஞ்சம்
வெற்றித் திருப்பார்வை விளங்கவந்த திருமகனால்
செட்டிமக்கள் வரலாற்றைச் செந்தமிழ்த்தாய் பாடுகிறாள்.

கருவரங்கில் அன்னையிடம் கற்றதமிழ்த் தொண்டன்றோ
திருவரங்கக் கோபுரம் போல் திருநாவை உயர்த்துவது!
கலைமகள் அன்பரைக் காதலிக்கும் தொண்டருக்கு
அலைமகள் அருளுண்டு! ஐயமி ருக்குமெனில்
திருநாவுக் கரசர்மனை சென்றொருநாள் காணுங்கள்!
அன்னை யருளாலும் ஆச்சியவர் காளியம்மாள்
முன்னைத் தவத்தாலும் மூதறிஞர் வாழ்த்தாலும்
உயர்ந்தார் திருநாவு உலகமெலாம் பாராட்ட!
பொன்னகையை விற்றுப் புத்தகங்கள் அச்சடிக்கத்
தன்னகையைத் தந்த தமிழாச்சி காளியம்மாள்
கைராசி யாலின்று கனகமணிக் கோபுரம்போல்
ஐயா உயர்ந்தார் அறிஞரெலாம் பாராட்ட!
முயற்சி, உழைப்பு, முகத்தினிலே தாமரைபோல்
மலர்ச்சி, நல்லெண்ணம், மரியாதை தரும்பண்பு
நாணயம் அத்தோடு நாநயமும் பெற்றதனால்
நாவரசர் உயர்ந்தார் நல்லவர்கள் பாராட்ட!
ஞான மெனும் வேள்வி நாடோறும் வளர்க்கின்ற
வானதி யுடன்தமிழை வாழ்விப்பார் வாழியவே!
உளந்தோறும் சக்திநடம் உண்டாகத் தமிழெழுதும்
இளந்தேவன் வாழ்த்தாலே எல்லோரும் வாழியவே!

## பாளையங்கோட்டை சுந்தரம் பிள்ளை

எளிமையிற் சிறந்து, நாட்டார்
இதயத்தில் அமர்ந்து, நல்ல
புலமையிற் சிறந்தோர்க் கெல்லாம்
புகலிடம் ஆகி, தொண்டின்
தலைமையில் நிற்கும் நெல்லைத்
தாய் ஒன்று கண்டேன்; இந்த
வளமையில் ஓங்கும் தாய்போல்
வள்ளலைக் கண்ட தில்லை.

காட்சியில் எளிய ராகி
கடமையில் பெரிய ரான
மாட்சிசேர் சுந்த ரத்தின்
மனமொரு கோயில்! நெஞ்சை
ஆட்சிசெய் கம்ப நாடன்
அருளினைப் பெற்றார்
தீட்சிதர் அருளும் பெற்றார்
தியாகரின் அருளும் பெற்றார்.

கை தந்த செல்வம் தன்னைக்
கையறி யாத வண்ணம்
செய்யுமோர் தாயை நெல்லைச்
சீமையில் கண்டேன்! நெஞ்சில்
நெய்ததோர் கவிதை தன்னை
நெறிதந்த தாய்க்குத் தந்தேன்
தைதந்த கதிரைப் போலத்
தரைமிசை வள்ளல் வாழ்க!

**பத்மநாபன் இ.ஆ.ப.**

## இதோ ஒரு சேக்கிழார்.

ஆதனூர்ப் பிறந்து பண்ணை
அடிமையூர் மனித ராகி,
தாதனூர்ப் பணிகள் செய்து
தலைவனூர்க் காதல் கொண்டு
வேதனூர்க் காரர் எல்லாம்
வியப்பினூர் செல்ல வைத்து
நாதனூர் சென்ற எங்கள்
நந்தனார் அடிகள் போற்றி!

நந்தனார் என்ன தந்தார்
நமக்கெலாம் என்று கேட்டால்
அந்தணர் அறவோர் என்னும்
அறிவினை நமக்குத் தந்தார்!
செந்தமிழ்ச் சித்தர் ஆவார்
சிவம் என்னும் உண்மை தந்தார்
எந்தவோர் தடையும் அன்புக்
கிலையெனும் உணர்வைத் தந்தார்!

குலத்துக்குக் கொள்கை தந்தார்
குடிசைக்குக் கோவில் தந்தார்
நிலத்துக்குப் புனிதம் தந்தார்
நெருப்புக்குத் தூய்மை தந்தார்

உளத்துக்குள் உறுதி என்றும்
உறுதியாய் உடையோன் எந்தப்
புலத்துக்கும் தெய்வம் என்ற
புதியதோர் வேதம் தந்தார்!

அவை தந்த நந்தனாரின்
அருமையைப் பத்ம நாபர்
சுவை தந்த நடையில் தந்தார்!
சுருதிக்குப் பொருளைத் தந்தார்!
இவர் தந்த ஆய்வு தந்த
இன்பத்தை, எழுச்சி தன்னை
எவர் தந்தார் இதுவ ரைக்கும்
என்றதோர் வியப்பைத் தந்தார்!

சாந்தத்தின் மொழி பெயர்ப்பு
சத்திய விழி நெருப்பு!
மாந்தர்க்குள் கீழ் மேல் என்னும்
மயக்கத்துக் கோர் மருந்து!
காந்தத்தை எழுத்தில் கொண்ட
கவிதைக்குத் தந்தை! வாழ்வில்
சாந்தியை, ஆனந் தத்தைத்
தாம் பெற்றார், எல்லாம் பெற்றார்!

ஆள்பவர்க் கமைச்ச ராகி,
ஆண்டவர்க் கன்பர் ஆனார்
வாழ்வினை வரலாறாக்கும்
வளர்புகழ்ச் சேக்கிழார் போல்
ஆள்பவர்க் கணுக்க ராகி
ஆண்டவன் அடியார் நந்தன்
வாழ்வினை வரலா றாக்கும்
வளர்பத்ம நாபர் வாழ்க!

## கல்வியரசி எலிசபெத் தாமஸ்

பொங்கிவரு கங்கைநதி போலஒரு அன்புநதி
பொங்கி வரும் கண்களுண்டு
பூலோக வைகுந்தம் என்ற திரு வரங்கத்தின்
புகழ் பாடும் நெஞ்ச முண்டு
சங்கினொடு சக்கரமும் சாரங்கன் சின்னமெனத்
தாங்குமிரு தோள்களுண்டு
சந்தான கிருஷ்ணன் எழில் ராதைருக் மணியோடு
தரிசிக்கும் பக்தியுண்டு
திங்களொடு சூரியனும் தங்குகிற காலம் வரை
தீராத கீர்த்தியுண்டு
திருவுண்டு, அருளுண்டு, தெய்வீக மணமுண்டு
திருமகளின் வாசமுண்டு
பெங்களூர்ச் சாமி எனும் ராமானுசதாசப்
பெரியவர் பெருமை இதுகாண்!
பேருலகில் முதல் நாடு என்கின்ற பேர்பெற்றுப்
பெருமை பெறும் அன்னை நாடே!

கண் பெற்ற காரணம் காளிங்க நர்த்தனக்
கண்ணனவன் திருக் காட்சிகள்!
கை பெற்ற காரணம் கற்பூர மணங்கமழும்
கலைக் கோயில் தொழும்மாட்சிகள்
பொன் பெற்ற காரணம் புருஷோத்த மன்கோயில்
புதிதாக உருவாக்குதல்
புகழ் பெற்ற காரணம் பிருந்தா வனம் போலப்
பூமியை உருவாக்குதல்
எண் பெற்ற காரணம் எட்டெழுத்துப் பேரை
எப்போதும் உருவேற்றுதல்
இயல் பெற்ற காரணம் இணையற்ற பாகவதம்
இசையிலே நிறை வேற்றுதல்!
விண் பெற்ற பெருவீரர் ராமா னுசதாசர்
விதித்திட்ட நீதியிது காண்!
விழி பெற்ற திசையெல்லாம் மொழிகற்றுப் புகழ்பாட
விழைகின்ற அன்னை நாடே!

மாட்டிடையன் தொண்டுக்கு மகிழ்கின்ற ஒரு வீடு
மாதாவின் குடும்பமாக
மாதாவின் மகன் முன்னர் மண்டியிடும் ஒரு வீடு
மாமியார் குடும்பமாக
மாட்டிடையன் அன்புக்கும் ஆட்டிடையன் அன்புக்கும்
மகரந்தச் சேர்க்கைசெய்த
மகராசி என் அன்னை சரசுவதி நெஞ்சுக்கு
மரியாளும் ஒரு தேவகி!
ஏட்டிடையில் எழுத்திடையில் இது போல ஒரு பெண்ணை
என்றைக்கும் கண்டதில்லை
எட்டாயிரம் பிள்ளை கற்கின்ற கலைக் கோயில்
இவர் தோட்ட அறிவு முல்லை!
பாட்டுடைய தலைவரவர் ராமானுசதாசர்
பேத்தி பெறு கீர்த்தி இதுகாண்!
பல கலைகள் ஆகமமும் பல சமய நீதிகளும்
பாலிக்கும் அன்னை நாடே!

பாட்டனார் இன்றைக்குப் பாட்டானார் என்ற நிலை
படைத்ததொரு பேத்தி வாழ்க!
பரமபத வைப்பருளும் பரந்தாமன் நீழலில்
பாடுகிற பாட்டன் வாழ்க!
ஆட்டமுடன் பாட்டுமாய் ஆயனது புகழ் பாடும்
அடியவர்கள் சங்கம் வாழ்க!
ஆழ்வார்கள் திருவாயின் அமுதத்தில் தங்கள் மனம்
ஆழ்வார்கள் கூடி வாழ்க!
நாட்டு புகழ் லட்சுமணன் தங்கம்மாள் என்னுமிரு
நல்லவர்கள் தொண்டு வாழ்க!
நற்றவத் திருத்தொண்டு நாயகன் தாமஸ் எனும்
நம்பி புகழ் என்றும் வாழ்க!
ஈட்டு புகழ் இளந்தேவன் ஈடற்ற கவிவாணன்
எழுதுகிற பாடலிது காண்
என்றுமுள செந்தமிழை இன்பமுடன் ஓதிவரும்
இணையற்ற அன்னை நாடே!

## மாத்தளை மாரிமுத்து செட்டியார்

மாத்தளை என்பது
மரகதத் தீவின் மாணிக்க நகரம்
மாணிக்க நகரின் ஆணிப்பொன் மனிதர்
மாரி முத்து செட்டியார் என்பவர்
எனத் தமிழ்போற்ற எழுந்த வான் சுடரே
நீங்கள்!
அறப்பயிர் உழவர்! ஆன்மாவின் தோழர்!
மிகப்பெரும் தமிழர்! தவப்பெரும் செல்வர்!
பகைச்சுவை அறியா நகைச்சுவைத் தென்றல்!
உழைப்பினால் உயரும் சிறப்பினில் கோபுரம்!
முத்து மாரியின் அற்புதப் பிள்ளை!
முத்தமிழ் வாணர்க்கு மணக்கின்ற முல்லை!
ஞாலத்துத் திசைகளில் நல்லுலாக் காண
ஈழத்துத் தச்சர் இழைத்த சித்திரத்தேர்!
மாண்புள்ள மனைவியும் மக்கட் செல்வமும்
தூண்டுகோல் நண்பரும் தொல்பெரும் சுற்றமும்
கூடிப் பல்லாண்டு குமரராய் வாழ்க!
பாடிப் பரவினோம் பராசக்தி காக்க!
குலமகள் நெற்றியின் குங்குமச் சிரிப்பாய்
நிலமிசை வாழ்க! நீடூழி வாழ்கவே!

# விழாவேந்தர் என்.கே.டி. முத்து

அதிரப் பேசி அறியாராய் - நம்
அன்புக் கென்றும் உரியாராய்
இதயத் தென்றல் வருகிறது - புவி
என்.கே.டி.முத் தென்கிறது

வெள்ளைச் சிந்தை உடையாராய் - தமிழ்
வெண்கொற் றக்குடை உடையாராய்
பிள்ளைச் சிரிப்பு வருகிறது - அதன்
பெயரே முத்தாய் ஒளிர்கிறது!

'வேந்தர்' விருதுக் குரியாராய் - நாம்
விரும்பித் தொழுகிற பெரியாராய்
சாந்தப் பறவை வருகிறது - அதன்
சாதனை முத்தாய்ச் சுடர்கிறது!

முத்துச் சுடரே நீ வாழ்க - ஒரு
முழுநில வாயுன் குலம்வாழ்க!
எத்திக் கும்புகழ் இளந்தேவன் - தரும்
இன்பத் தமிழாய் நீ வாழ்க!

## நெல்லை தளவாய் ராமசாமி

கலை வாயில் என்றும் கவிவாயில் என்றும்
கவிவாணர் போற்றி மகிழும்
நிலை வாயில் ஒன்று தளவாயின் கோயில்
நெடுவாயில் ஆன படியால்
தளவாயின் வீடு தமிழ் வீடு தென்றல்
தவழ்வீடு காண்க மனமே!
அலை வாயில் வீடு படை வீடு கொண்ட
அயில் வேலன் காக்க தினமே!

களி கூர வந்து கவிராசர் கூடும்
கழகத்தின் மூலம் இவரே
புலி கூட வந்து தமிழ் கேட்கும் நெல்லைப்
பொருநைக்கு வேந்தர் இவரே!
ஒளி கூட வந்து குதிபோடும் முன்றில்
இவர் வீடு காண்க மனமே
அளி கூடுகின்ற அலைவா யுகந்த
அயில் வேலன் காக்க தினமே!

சதபுத்ரி என்னும் அருள் தங்கி ஓங்கும்
தலமிங்கு காணும் மோனம்
விதி முற்றும் வேக நதி பெற்ற பாலன்
விளையாடும் சந்நிதானம்
இது பெற்ற வீடு இதற்கில்லை ஈடு
எனப்பாடு நல்ல மனமே!
திதி புத்ரர் வீறு அது முற்றும் வாங்கும்
திரு வேலன் காக்க தினமே!

சிரிக்கின்ற கண்கள் சிலிர்க்கின்ற மீசை
டி.கே.சி பேரர் ஆகி
தரிக்கின்ற அந்தத் தளவாயின் பட்டம்
தம்தந்தை வழியில் தாங்கி
விரிக்கின்ற முல்லை மலர் போன்ற நெல்லை
வேளாளர் காண்க மனமே!
செருக்குன்றம் மீது வடிவேல் எறிந்த
ஜெயவேலன் காக்க தினமே!

ஒருவாச கத்தைத் தளவாயின் வாயின்
உரையென்று கேட்ட பொழுதே
துருவாசர் கூட ஒரு கோபம் விட்டு
மரியாதை கொண்டு திகழ்வார்.
திருவாச கங்கள் திருவாயில் வந்து
தினம்மோ கனங்கள் பாடும்.
ஒருராம சாமி உறைகின்ற நெல்லை
ஒளி வேலன் காக்க தினமே!

தவஞான மோடு தமிழ்ஞானம் கொண்ட
தனிஞானி இராம சாமி
சிவஞானம் கொண்ட வடிவோடு சேர்ந்து
ஸ்ரீராம னாக ஆனார்
கவிஞானம் கொண்டு கலைஞானம் கொண்ட
கவின் வாழ்வு காண்க மனமே
நவஞான நாதன் ஒருசாமி நாதன்
திருவேலன் காக்க தினமே!

பதினாறு பேறு நிறைகின்ற இல்லம்
தளவாயின் இல்ல மாகும்
எதிரேது மற்ற இவரோடு நோக்கில்
இமயங்கள் குள்ள மாகும்
சதிராடு கின்ற வளம்கொண்ட நெல்லை
மதிவாணர் காண்க மனமே!
முதிராத திங்கள் முடிசூடி மைந்தன்
வடிவேலன் காக்க தினமே!

வேதங்கள் வந்து விளையாடு கின்ற
நெல்வேலி வாழ்க வாழ்க!
கீதங்கள் பாடி இளந்தேவர் போற்றும்
தளவாயின் நாமம் வாழ்க!
பாதங்கள் போற்றிப் பலர்வந்து பாடும்
பண்பாளர் காண்க மனமே!
மாதங்கி மைந்தன் மகராசன் எங்கள்
மணிவேலன் காக்க தினமே!

# தந்தை இராமநாத பிள்ளை

*சைவத் திருமகனே! சத்தியத்தின் மொழிபெயர்ப்பே!*
*தெய்வத் திருப்பணியே! சின்னமனூர்க் காவியமே!*
*'பொன்னார்ந்த திருமேனி! புகழார்ந்த ஒருஞானி'*
*என்றூரார் போற்றுகிற என்பிறவித் தவப்பயனே!*

*பூமிக்கு நற்பொறுமை, சாமிக்குத் தெய்வீகம்*
*காண்பிக்க இயற்கை கண்டடெடுத்த புண்ணியரே!*

*அழுக்கை அறியாத வெள்ளாடை! என்றைக்கும்*
*இழுக்கை அறியாத இலட்சியத்து மாவீரம்!*
*ஆறுபத்து ஆண்டுகளாய் அய்யப்பன் தொண்டுக்கே*
*ஆர்வம் வைத்த பேரிதயம்!அசையாத மனஉறுதி!*
*எழுபதிலும் பேருழைப்பு எப்போதும் தன்னடக்கம்*
*எல்லோர்க்கும் குருநாதன்! இவர்ராம நாதன்!*

*காலில் நகம்முளைத்த காலமுதல் உங்களைப்போல்*
*கஷ்டம் தொடர்கதையாய்க் கண்டவர்கள் யாருமில்லை!*
*ஈசன் செயலென்று எண்ணி இருந்ததல்லால்*
*வருத்தத்தைக் கூட வாய்திறந்து சொன்னதில்லை!*
*உங்கள் பண்புகளில் ஒன்றேனும் பெற்றிருந்தால்*
*திங்களிலே கால்வைத்துச் செவ்வாய்க்குப் போயிருப்பேன்!*

நீலிமலை ஏற்றத்தில் நின்றுநான் விடும்போது
உச்சியிலே இருந்து உடனே திரும்பிவந்து
இருமுடியைத், தோள்பையை, என்னிடத்தில் தான் வாங்கி
இரட்டைச் சுமையோடு இயல்பாய் நடப்பீர்கள்!

நான்
பத்திலும் இப்படித்தான் முப்பதிலும் இப்படித்தான்
எத்தாலும் என்னுடம்பு சுமைசுமக்க ஆகாது!
ஆடை துவைத்தெனது அழுக்குச் செருப்புகளை
நீராட்டித் துடைப்பீர்கள்! நின்று நான் பார்த்திருப்பேன்!
நாலிலும் இப்படித்தான் நாற்பதிலும் இப்படித்தான்!
நானறிந்த தேதுமில்லை! இன்றைக்கும் இதேநிலைதான்,
ஆடை துவைப்பதோ அருமை மனைவிதொழில்!
செருப்புத் துடைப்பதோ சேய்கள் உபகாரம்!
அப்பாவே, உங்கள் அன்புப் பணிகளுக்கு
எப்போது கடன்தீர்ப்பேன்! எப்படிநான் நன்றிசொல்வேன்!
தரும துரையே! தன்னடக்கப் பெருமகனே!
அருமை மகனுக்கு ஆசிதர வேண்டுகிறேன்!

# அன்னை அழகுதாய்

என்னை நானாக்கி எனக்குள்ளே நானான
பெண்மைத் திருவடிவே! பெற்றெடுத்த என்தாயே!
என்னதவம் செய்தேன், எழுபிறப்பில் பூசைசெய்தேன்
உன்னைநான் உதடுகளால் அன்னையென உச்சரிக்க!

ஞானத் திருவுருவே! நானறிந்த திருமறையே!
மானத் தமிழ்மகளே! மகாசக்தி மறுவடிவே!
நீ நடக்கும் தெருப்புழுதி நிஜமாகத் திருநீறு!
கால்படிந்த இடமெல்லாம் கண்வணங்கும் கைலாசம்!

பாசத்தால் பிள்ளை பகருவது அல்லஇது!
நேசத்தால் ஊர்மக்கள் நிதமுரைக்கும் வார்த்தையிது!
அழகுதாய் என்றன்று யாருனக்குப் பேர்வைத்தார்?
பழகுதமிழால் அவருக்குப் பாட்டெழுத வேண்டுமம்மா!

சின்னஇதழ் விரித்துச் செந்தமிழ்நீ பேசுகையில்
முன்னிருப்போர் எல்லாரும் மூச்சுவிடும் சித்திரங்கள்!
ஒளியே பேச்சாக உருவெடுத்து வருவதனை
உன்னிடத்தில் கண்டதல்லால் ஓரிடத்தில் கண்டதில்லை!
தெம்பிழந்த கூடுகளாய்த் திருத்தாள் பணிவோர்க்கு
நம்பிக்கை வழங்கும் நீ நடமாடும் மின் நிலையம்!

கருப்பையில் நீசுமந்த காரணம்தான் இன்றென்னைக்
கர்வம் சுமக்கிறது! கனத்தபுகழ் தொடர்கிறது!
காலின்கீழ் பூமியென்று கற்பித்தார் பள்ளியிலே!
காலின்கீழ் வானமென்று கற்பித்த கழகம்நீ!

தாயே எனக்குத் தமிழ்தந்த தமிழ்மகளே!
நீபடைத்த கவிதைநான் நினக்கெழுதும் கவிதையிது!
அமிழ்தூட்டி நீவளர்த்தாய் ஆகையினால் என்வாயில்
உமிழ்நீரும் தமிழ்நீராய் ஊறுவதைப் பாரம்மா!

அழுதபடி பிறந்தேனா! அன்றைக்கு நானுன்னைத்
தொழுதபடி பிறந்தேனா! தெரியாது! இன்றைக்கோ
தொழுதபடி வாழுகிறேன்! தூயகவி பாடுகிறேன்!
எழுதுவது யாதெனினும் நான்வார்த்தை! நீஅர்த்தம்!

## சந்திரகாந்தி இளந்தேவன்

என்னைக் கைப்பிடித்து
எனக்குள்ளே நானான
பெண்மைத் திருவடிவம்
மண்ணைப் பொன்னாக்கும்
மலர் மகளின் மறுபதிப்பு

தேயாத தேவநிலா!
தென் பாண்டிக் கடல் முத்து!
ஓயாத பேருழைப்பு!
ஒளிக்காத வெள்ளை மனம்!

தேவாரத் திருப்பதிகம்
திருவாத வூர்ப் பாடல்
ஆழ்வாரின் அருளமுது
அழந்தூரான் ராமகதை

ஒளிக் குன்றில் எனையேற்றி
உலகத்தைக் காட்டுகின்ற
வழிகாட்டி! என்னுடைய
வதனத்தில் இன்னொரு கண்!

சபையறிந்து நான் பாடிச்
சகாப்தம் படைப்பதிந்த
வளையணிந்த திருக்கரத்து
வாழ்வரசி தந்த வரம்!
அறம் வளர்க்கும் நாயகியே
அறிவார்ந்த திருமகளே
உரங்கொண்ட சத்தியமே
ஒளிக் கவிதை நீ வாழ்க!

## கவியரசர் இளந்தேவன்

இவர் கவிதை எழுதுகிறவர் அல்லர்;
கவிதையாகவே வாழ்கிறவர்.

பாரதி, பாரதிதாசனுக்குப் பிறகு
தமிழ் மொழிக்கும், உலக இலக்கியத்திற்கும்
உண்மையைத் தேடுகிற
உயர்ந்த கவிஞர்
கிடைத்தார் என்பதில்
மானுடம் மனமகிழ்ச்சி கொள்ளலாம்.

-வார்த்தைச் சித்தர், டாக்டர் வலம்புரிஜான்.